மேல் வரிசையில்,

2வது கட்டத்தில் அங். 1 + கீ. வ. ஷஷ்டம் 2 = 3

## சம்யோக மேரு

வேண்டிய அளவையுள்ள தாள ப்ரஸ்தாரத்தில் எல்லாம் த்ருதமாக உள்ள பேதங்கள், எல்லாம் லகுவாகவுள்ள பேதங்கள், எல்லாம் குருவாகவுள்ள பேதங்கள், எல்லாம் ப்லுதமாகவுள்ள பேதங்கள, த்ருத லகு சேர்ந்த பேதங்கள், த்ருத குரு சேர்ந்த பேதங்கள், த்ருதம் ப்லுதம் சேர்ந்த பேதங்கள், லகு குரு சேர்ந்த பேதங்கள், லகு ப்லுதம் சேர்ந்த பேதங்கள், குரு ப்லுதம் சேர்ந்த பேதங்கள், த்ருத, லகு, குரு சேர்ந்த பேதங்கள், த்ருத லகு ப்லுதம் சேர்ந்த பேதங்கள், த்ருத குரு ப்லுதம் சேர்ந்த பேதங்கள், லகு குரு ப்லுதம் சேர்ந்த பேதங்கள் முதலியவைகளைக் கண்டுபிடிப்பதற்காக ஏற்பட்ட மேருவுக்கு 'சம்யோக மேரு' என்று பெயர். இதற்குக் கட்டங்களை மேலிருந்து கீழாக வரிசைகளை அமைக்கவேண்டும் முதலில் நமக்கு வேண்டிய தாளத்தின் கால அளவையிலுள்ள த்ருதங்களின் எண்ணிக்கை வரையில் மேலிருந்து கீழாக 1, 2, 3 என்று எழுதிக் கொள்ளவேண்டும். அடுத்த மேலிருந்து கீழ் வரிசைகள் நான்கிலும் அதே எண்ணிக்கையுள்ள கட்டங்களை அமைக்க வேண்டும். 5வது வரிசையில் மேலே கட்டம் ஒன்றைக் குறைத்துக் கொண்டு பாக்கிக் கட்டங்களை அமைக்க வேண்டும். அதற்கு அடுத்த வரிசையில் மேலும் இரண்டு கட்டங்களைக் குறைக்க வேண்டும். அதற்கு அடுத்த இரண்டு வரிசைகளிலும் மேலும் ஒரு கட்டம் குறைக்க வேண்டும். மேலும் மற்றொரு கட்டத்தைக்குறைத்து அடுத்த மூன்று வரிசைகள் அமைக்க வேண்டும். அதற்கு அடுத்த வரிசையில் மேலும் 2 கட்டங்கள் குறைக்க வேண்டும். அதற்கடுத்த வரிசையில் ஒரு கட்டம் குறைக்க வேண்டும். அதற்கடுத்த வரிசையில் இன்னும் ஒரு கட்டம் குறைவாக அமைக்க வேண்டும். அப்பொழுது கட்டங்கள் கீழே கண்டபடி அமையும்:—

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 0 | 0 | 1 | S | S̀ | | | | | | | | | | | |
| 1 | 1 | 0 | 0 | 0 | | | | | | | | | | | |
| 2 | 1 | 1 | 0 | 0 | 0I | | | | | | | | | | |
| 3 | 1 | 0 | 0 | 0 | 2 | | | | | | | | | | |
| 4 | 1 | 1 | 1 | 0 | 3 | 0S | | | | | | | | | |
| 5 | 1 | 0 | 0 | 0 | 7 | 2 | 0S̀ | IS | | | | | | | |
| 6 | 1 | 1 | 0 | 1 | 11 | 3 | 0 | 2 | IS | SS̀ | 0IS | | | | |
| 7 | 1 | 0 | 0 | 0 | 20 | 4 | 2 | 0 | 0 | 0 | 6 | | | | |
| 8 | 1 | 1 | 1 | 0 | 32 | 5 | 3 | 3 | 2 | 0 | 12 | 0IS̀ | | | |
| 9 | 1 | 0 | 0 | 0 | 54 | 9 | 4 | 0 | 0 | 0 | 32 | 6 | | | |
| 10 | 1 | 1 | 0 | 0 | 87 | 13 | 5 | 7 | 3 | 2 | 60 | 12 | 0SS̀ | | |
| 11 | 1 | 0 | 0 | 0 | 143 | 18 | 6 | 0 | 0 | 0 | 134 | 32 | 6 | ISS̀ | |
| 12 | 1 | 1 | 1 | 1 | 231 | 24 | 7 | 11 | 4 | 0 | 251 | 60 | 12 | 6 | 0ISS̀ |
| 13 | 1 | 0 | 0 | 0 | 376 | 35 | 11 | 0 | 0 | 0 | 500 | 122 | 20 | 0 | 24 |

இந்தக் கட்டங்களில் மேலிருந்து கீழாக உள்ள முதல் 4 வரிசைகளில் நமக்கு வேண்டிய தாளத்தில் முதல் வரிசைக் கட்டத்தில் எல்லாம் த்ருதமாகவுள்ள பேதங்களின் தொகையும், இரண்டாவது வரிசைக் கட்டத்தில் எல்லாம் லகுவாகவுள்ள பேதங்களின் தொகையும், மூன்றாவது வரிசைக் கட்டத்தில் எல்லாம் குருவாகவுள்ள பேதங்களின் தொகையும், நான்காவது வரிசைக் கட்டத்தில் எல்லாம் ப்லுதமாகவுள்ள பேதங்களின் தொகையும் கண்டு கொள்ளப்படும். ஒவ்வொரு வரிசையிலும் எந்த அங்கங்கள் சேர்ந்த பேதங்கள் காட்டப்படுகின்றன என்பதை ஞாபகப்படுத்துவதற்காக அவைகளை வரிசைகளின் மேலே எழுதிக் கொள்ளவும். 5வது வரிசை த்ருதம், லகு சேர்ந்த பேதங்களின் தொகையைக் குறிக்கிறது. 6வது வரிசை த்ருதம் குரு சேர்ந்த பேதங்களைக் குறிக்கும். 7வது வரிசை த்ருதம் ப்லுதம் சேர்ந்த பேதங்களைக்குறிக்கும். 8வது வரிசை லகு குரு சேர்ந்த பேதங்களைக் குறிக்கும். 9வது வரிசை லகு ப்லுதம் சேர்ந்த பேதங்களைக் குறிக்கும். 10வது வரிசை குரு ப்லுதம் சேர்ந்த பேதங்களைக் குறிக்கும். 11வது வரிசை த்ருத லகு குரு சேர்ந்த பேதங்களைக் குறிக்கும். 12வது வரிசை த்ருத லகு ப்லுதம் சேர்ந்த பேதங்களைக் குறிக்கும். 13வது வரிசை த்ருத குரு ப்லுதம் சேர்ந்த பேதங்களைக் குறிக்கும். இந்தக் கட்டங்களில் எண்கள் அமைக்கும் விதம் வருமாறு:—

முதல் வரிசையில் எல்லாம் த்ருதமுள்ள பேதம் ஒன்றேயாகையால் முதல் கட்டத்தில் 1 என்று எழுதிக்கொள்ளவேண்டும். 2வது வரிசையில் முதல் கட்டத்தில் பூஜ்யத்தையும், இரண்டாவது கட்டத்தில் 1ஐயும் எழுதிக் கொள்ள வேண்டும். மூன்றாவது வரிசையில் முதல் மூன்று கட்டங்களில் பூஜ்யத்தையும், நான்காவது கட்டத்தில் 1ஐயும் எழுதிக் கொள்ள வேண்டும். நாலாவது வரிசையில் முதல் 5 கட்டங்களில் பூஜ்யங்களையும், 6வது கட்டத்தில் 1ஐயும் எழுதிக்கொள்ள வேண்டும். முதல் நான்கு வரிசைகளிலும் மற்ற கட்டங்களில் முறையே த்ருத வரிசையில் அந்தியத்தையும், லகு வரிசையில் உபாந்தி

யத்தையும், குரு வரிசையில் சதுர்த்தத்தையும், ப்லுத வரிசையில் ஷஷ்டத்தையும் எழுதிக் கொள்ள வேண்டும்.

இரண்டு அங்கங்கள் சேர்ந்த தொகுதிகளின் வரிசைகளில் இலக்கங்கள் அமைக்கும் முறை:—

அந்தந்தத் தொகுதியிலுள்ள த்ருத, லகு, குரு, ப்லுதத்துக்காக அதே வரிசையிலுள்ள அந்திய, உபாந்திய சதுர்த்த ஷஷ்டங்களையும், முதல் நான்கு வரிசைகளிலிருந்தும் முறையே அந்திய, உபாந்திய, சதுர்த்த, ஷஷ்ட எண்களையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். அப்படி முதல் நான்கு வரிசைகளில் எண்களை எடுத்துக் கொள்ளும்போது தொகுதியிலுள்ள அங்கங்களுக்கு ஏற்பட்ட அந்திய, உபாந்திய, சதுர்த்த, ஷஷ்டம் என்ற நிபந்தனையை ஒன்றுக்கொன்று மாற்றிக் கொள்ள வேண்டும். உதாரணமாக த்ருத லகு என்ற தொகுதிக்கான வரிசையில் எண் அமைக்கும் விதம்:— முதலில் அதே வரிசையில் த்ருதத்திற்காக அந்தியமும், லகுவுக்காக உபாந்தியமும், எடுத்துச் சேர்த்துக்கொள்ள வேண்டும். அவற்றோடு த்ருத வரிசை லகு வரிசைகளிலிருந்தும் சேர்த்துக் கொள்ள வேண்டிய எண்கள் இருக்கின்றன. த்ருத, லகுக்களுக்கான அந்திய, உபாந்தியம் என்பதை த்ருத வரிசையில் உபாந்தியத்தையும், லகு வரிசையில் அந்தியத்தையும் மாற்றி எடுத்துக் கொள்ள வேண்டும். த்ருத குரு என்ற தொகுதிக்கான வரிசையில் எண்கள் அமைக்கும் விதம்:—முதலில் அதே வரிசையில் த்ருதத்திற்காக அந்தியமும், குருவுக்காக சதுர்த்தமும் எடுத்துச் சேர்த்துக் கொள்ள வேண்டும். அவற்றோடு த்ருத வரிசை குரு வரிசைகளிலிருந்தும் சேர்த்துக் கொள்ள வேண்டிய எண்கள் இருக்கின்றன. த்ருத குருக்களுக்கான அந்திய சதுர்த்தம் என்பதை த்ருத வரிசையில் சதுர்த்தத்தையும், குரு வரிசையில் அந்தியத்தையும் மாற்றி எடுத்துக் கொள்ள வேண்டும். மற்றவைகளையும் இவ்விதமே கண்டு கொள்க. அப்போது அடியிற்கண்டபடி எண்கள் அமையும்:—

5. த்ருத லகுத்தோகுதி :—

| | அதே வரிசையில் | | | | முதல் நான்கு வரிசைகளில் | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | அந்தியம் | + | உபாந்தியம் | + | த்ருதத்தில் உபாந்தியம் | + | லகுவில் அந்தியம் | | | |
| முதல் கட்டத்தில் | இல்லை | + | இல்லை | + | 1 | + | 1 | = | 2 |
| 2-வது ,, | 2 | + | ,, | + | 1 | + | 0 | = | 3 |
| 3-வது ,, | 3 | + | 2 | + | 1 | + | 1 | = | 7 |
| 4-வது ,, | 7 | + | 3 | + | 1 | + | 0 | = | 11 |
| 5-வது ,, | 11 | + | 7 | + | 1 | + | 1 | = | 20 |
| 6-வது ,, | 20 | + | 11 | + | 1 | + | 0 | = | 32 |
| 7-வது ,, | 32 | + | 20 | + | 1 | + | 1 | = | 54 |
| 8-வது ,, | 54 | + | 32 | + | 1 | + | 0 | = | 87 |

இதே போல் இந்த வரிசையிலுள்ள மற்ற கட்டங்களிலும் எண்கள் அமைக்க வேண்டும்.

6. த்ருத குருத்தோகுதி :—

| | அதே வரிசையில் | | | | முதல் நான்கு வரிசைகளில் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | அந்தியம் | + | சதுர்த்தம் | + | த்ருதத்தில் சதுர்த்தம் | + | குருவில் அந்தியம் | | |
| முதல் கட்டத்தில் | இல்லை | + | இல்லை | + | 1 | + | 1 | = | 2 |
| 2-வது ,, | 2 | + | இல்லை | + | 1 | + | 0 | = | 3 |
| 3-வது ,, | 3 | + | இல்லை | + | 1 | + | 0 | = | 4 |

| | | அதே வரிசையில் | | | | முதல் நான்கு வரிசைகளில் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | அந்தியம் | + | சதுர்த்தம் | + | த்ருதத்தில் சதுர்த்தம். | + | குருவில் அந்தியம் | | |
| 4-வது | ,, | 4 | + | இல்லை | + | 1 | + | 0 | = | 5 |
| 5-வது | ,, | 5 | + | 2 | + | 1 | + | 1 | = | 9 |
| 6-வது | ,, | 9 | + | 3 | + | 1 | + | 0 | = | 13 |
| 7-வது | ,, | 13 | + | 4 | + | 1 | + | 0 | = | 18 |
| 8-வது | ,, | 18 | + | 5 | + | 1 | + | 0 | = | 24 |
| 9-வது | ,, | 24 | + | 9 | + | 1 | + | 1 | = | 35 |

7. த்ருத ப்லுதத்தோகுதி:—

| | | அதே வரிசையில் | | | | முதல் நான்கு வரிசைகளில் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | அந்தியம் | + | ஷஷ்டம் | + | த்ருதத்தில் ஷஷ்டம் | + | ப்லுதத்தில் அந்தியம் | | |
| முதல் | கட்டத்தில் | இல்லை | + | இல்லை | + | இல்லை | + | 0 | = | 0 |
| 2-வது | ,, | 0 | + | இல்லை | + | 1 | + | 1 | = | 2 |
| 3-வது | ,, | 2 | + | இல்லை | + | 1 | + | 0 | = | 3 |
| 4-வது | ,, | 3 | + | ,, | + | 1 | + | 0 | = | 4 |
| 5-வது | ,, | 4 | + | ,, | + | 1 | + | 0 | = | 5 |
| 6-வது | ,, | 5 | + | ,, | + | 1 | + | 0 | = | 6 |
| 7-வது | ,, | 6 | + | ,, | + | 1 | + | 0 | = | 7 |
| 8-வது | ,, | 7 | + | 2 | + | 1 | + | 1 | = | 11 |

8. லகு குருத்தோகுதி :—

| | அதேவரிசையில் | | | | முதல் நான்கு வரிசைகளில் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | உபாந்தியம் | + | சதுர்த்தம் | + | லகுவில் சதுர்த்தம் | + | குருவில் உபாந்தியம் | | |
| முதல் கட்டத்தில் | இல்லை | + | இல்லை | + | 1 | + | 1 | = | 2 |
| 2-வது ,, | ,, | + | ,, | + | 0 | + | 0 | = | 0 |
| 3-வது ,, | 2 | + | ,, | + | 1 | + | 0 | = | 3 |
| 4-வது ,, | 0 | + | இல்லை | + | 0 | + | 0 | = | 0 |
| 5-வது ,, | 3 | + | 2 | + | 1 | + | 1 | = | 7 |
| 6-வது ,, | 0 | + | 0 | + | 0 | + | 0 | = | 0 |
| 7-வது ,, | 7 | + | 3 | + | 1 | + | 0 | = | 11 |
| 8-வது ,, | 0 | + | 0 | + | 0 | + | 0 | = | 0 |

9. லகு ப்லுதத்தோகுதி:—

| | அதே வரிசையில் | | | | முதல் நான்கு வரிசைகளில் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | உபாந்தியம் | + | ஷஷ்டம் | + | ல்குவில் ஷஷ்டம் | + | ப்லுதத்தில் உபாந்தியம் | | |
| முதல் கட்டத்தில் | இல்லை | | இல்லை | + | 0 | + | 0 | = | 0 |
| 2-வது ,, | இல்லை | | ,, | + | 1 | + | 1 | = | 2 |
| 3-வது ,, | 0 | | ,, | + | 0 | + | 0 | = | 0 |
| 4-வது ,, | 2 | | ,, | + | 1 | + | 0 | = | 3 |

| | அதே வரிசையில் உபாந்தியம் | + ஷஷ்டம் | + லகுவில் ஷஷ்டம் | + ப்லுதத்தில் உபாந்தியம் | |
|---|---|---|---|---|---|
| 5-வது ,, | 0 | ,, | + 0 | + 0 | = 0 |
| 6-வது ,, | 3 | ,, | + 1 | + 0 | = 4 |
| 7-வது ,, | 0 | 0 | + 0 | + 0 | = 0 |

10. குரு ப்லுதத்தோகுதி :—

| | அதே வரிசையில் சதுர்த்தம் | + ஷஷ்டம் | + குருவில் ஷஷ்டம் | + ப்லுதத்தில் சதுர்த்தம் | |
|---|---|---|---|---|---|
| முதல் கட்டத்தில் | இல்லை | | + 0 | + 0 | = 0 |
| 2-வது ,, | ,, | | + 0 | + 0 | = 0 |
| 3-வது ,, | ,, | | + 0 | + 0 | = 0 |
| 4-வது ,, | ,, | | + 1 | + 1 | = 2 |
| 5-வது ,, | ,, | | + 0 | + 0 | = 0 |
| 6-வது ,, | 0 + | ,, | + 0 | + 0 | = 0 |
| 7-வது ,, | 0 + | 0 | + 0 | + 0 | = 0 |

மூன்று அங்கங்கள் சேர்ந்த தொகுதிகளிலுள்ள வரிசைகளில் எண்கள் அமைக்க முதலில் அங்கங்களுக்காக அவற்றிற்குரிய அதே வரிசையில் அந்திய, உபாந்திய, சதுர்த்த ஷஷ்டங்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். பிறகு தொகுதியிலுள்ள அங்கங்களை இரண்டிரண்டாகச் சேர்த்து அந்த

இரட்டை அங்கத் தொகுதிகளுக்காக முதல் நான்கு வரிசைகளிலும் அந்திய, உபாந்திய, சதுர்த்த, ஷஷ்டங்களை மாற்றியெடுத்துக் கொண்டது போல் எடுத்துச் சேர்த்துக் கொள்ள வேண்டும். அதாவது பெரிய அங்கங்களின் தொகுதியில் அந்திய, உபாந்திய, வரிசையில் முந்தியதையும் சிறிய அங்கங்களின் தொகுதியில் பிந்தியதையும் எடுத்துச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

11. த்ருத லகு குருத்தொகுதி :—

அதே வரிசையில் — இரட்டை அங்கத்தொகுதிகளில்

| | அங். | உபாங். | சதுர்த்தம் | லகுகுருவில் அங். | த்ருதகுருவில் உபாங். | த்ருதலகுவில் சது. | |
|---|---|---|---|---|---|---|---|
| முதல் கட்டம் | இல்லை | | | 2 | 2 | 2 | 6 |
| 2-வது ,, | 6 | இல்லை | இல்லை | 0 | 3 | 3 | 12 |
| 3-வது ,, | 12 | 6 | இல்லை | 3 | 4 | 7 | 32 |
| 4-வது ,, | 32 | 12 | இல்லை | 0 | 5 | 11 | 60 |
| 5-வது ,, | 60 | 32 | 6 | 7 | 9 | 20 | 134 |
| 6-வது ,, | 134 | 60 | 12 | 0 | 13 | 32 | 251 |
| 7-வது ,, | 251 | 134 | 32 | 11 | 18 | 54 | 500 |

12. த்ருத லகு ப்லுதத்தொகுதி: —

அதே வரிசையில் — இரட்டை அங்கத்தொகுதிகளில்

| | அங். | உபாங். | ஷஷ்டம் | லகுப்லுதத்தில் அங். | த்ருதப்லுதத்தில் உபாங். | த்ருதலகுவில் ஷஷ்டம். | |
|---|---|---|---|---|---|---|---|
| 1வது கட்டத்தில் | இல்லை | | | 2 | 2 | 2 | 6 |
| 2வது ,, | 6 | ,, | இல்லை | 0 | 3 | 3 | 12 |

| | | அதே வரிசையில் | | | | இரட்டை அங்கத்தொகுதிகளில் | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | அங். + | உபாங். + | ஷஷ்டம் + | லகுப்லுதத்தில் அங். | + | த்ருதப்லுதத்தில் உபாங் | + | த்ருதலகுவில் ஷஷ்டம் | | |
| 3வது ,, | 12+ | 6 + | இல்லை + | 3 | + | 4 | + | 7 | = | 32. |
| 4வது ,, | 32+ | 12 + | இல்லை + | 0 | + | 5 | + | 11 | = | 60 |
| 5வது ,, | 60+ | 32 + | ,, + | 4 | + | 6 | + | 20 | = | 122 |

13. த்ருத குரு ப்லுதத்தொகுதி :—

| | | அதே வரிசையில் | | | | இரட்டை அங்கத்தொகுதிகளில் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | அங் + | சது. + | ஷஷ்டம் + | குருப்லுதத்தில் அங். | + | த்ருதப்லுதத்தில் சது. | + | த்ருத குருவில் ஷஷ்டம் | | |
| முதல் கட்டத்தில் | | | இல்லை + | 2 | + | 2 | + | 2 | = | 6 |
| 2வது ,, | 6 + | இல்லை + | இல்லை + | 0 | + | 3 | + | 2 | = | 12 |
| 3வது ,, | 12 + | ,, + | ,, + | 0 | + | 4 | + | 4 | = | 20 |

14. லகு குரு ப்லுதத்தொகுதி :—

| | | அதே வரிசையில் | | | | இரட்டை அங்கத்தொகுதிகளில் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | உபாங். + | சது. + | ஷஷ்டம் + | குருப்லுதத்தில் உபாங். | + | லகுப்லுதத்தில் | + | லகுகுருவில் ஷஷ்டம் | | |
| முதல் கட்டத்தில் | | | இல்லை + | 2 | + | 2 | + | 2 | = | 6 |
| 2வது ,, | | | ,, + | 0 | + | 0 | + | 0 | = | 0 |

இவ்விதமே மற்ற கட்டங்களையும் பூர்த்தி செய்துகொள்ளலாம். நான்கு அங்கங்களுள்ள தொகுதிகளில் எண்கள் அமைக்க, முதலில் அதே வரிசையில் அவற்றின் அங்கங்களுக்குரிய அந்திய, உபாந்திய, சதுர்த்த, ஷஷ்டங்களைச் சேர்த்துக் கொள்ளவேண்டும். பிறகு அந்தத் தொகுதியிலுள்ள அங்கங்களை மும்மூன்றாகச் சேர்த்து அந்த மூன்று அங்கத் தொகுதிகளுக்குரிய வரிசைகளில் பெரிய அங்கங்கள் சேர்ந்த தொகுதிகளில் அந்திய, உபாந்திய வரிசையில் முந்தியதையும், சிறிய அங்கங்களின் தொகுதியில் பிந்தியதையும் எடுத்துச்சேர்த்துக் கொள்ள வேண்டும்.

15. த்ருத, லகு, குரு, ப்லுதத்தொகுதி :—

| அதே வரிசையில் | மூன்று அங்கத்தொகுதிகளில் |
|---|---|
| அந். + உபாந். + சது. + ஷஷ். + | லகு குரு ப்லுதத்ருதம் / த்ருதகுரு ப்லுதத்ருதம் / த்ருதலகு ப்லுதத்ருதம் / த்ருதலகு குருதே |
| | அந். + உபாந். + சது + ஷஷ். |

முதல் கட்டத்தில் இல்லை + 6 + 6 + 6 + 6 = 24

## கண்ட ப்ரஸ்தாரம்

வேண்டிய அளவையுள்ள தாளத்திற்கு ப்லுதம், குரு, லகு, த்ருதம் ஆகிய நான்கு அங்கங்களோடு கூடிய ப்ரஸ்தாரங்களை முறைப்படி எழுதி, அவைகளில் த்ருதமேயில்லாத ப்ரஸ்தாரங்கள், 2 த்ருதமுள்ள ப்ரஸ்தாரங்கள், 4 த்ருதமுள்ள ப்ரஸ்தாரங்கள் முதலியவைகளின் தொகைகளையும், ஒரு த்ருதமுள்ளவை, 3 த்ருதமுள்ளவை, 5 த்ருதமுள்ளவை முதலிய பேதங்களின் தொகையையும் கண்டுபிடிக்கும் அட்டவணையே த்ருதமேருவாக அமைக்கப்பட்டது. இவ்விதமே பேதங்களைக் கண்டுபிடிப்பதற்காக லகு மேரு, குரு மேரு, ப்லுத மேரு முதலியவைகள்

அமைக்கப்பட்டன. ப்ரஸ்தாரம் செய்யும்போது த்ருதமில்லாத ப்ரஸ்தாரங்களை மட்டும் வரிசையாக எப்படி எழுதுவது, ஒரு த்ருதமுள்ளவை, 2 த்ருதமுள்ளவை, 3 த்ருதமுள்ளவை முதலிய ப்ரஸ்தாரங்களை மட்டும் எப்படி எழுதுவது, இப்படியே லகுவில்லாதவை முதலாகிய ப்ரஸ்தாரங்களை மட்டும் எழுதும் முறை எப்படி, குரு, ப்லுதங்கள் இல்லாதன முதலிய ப்ரஸ்தாரங்கள் மட்டும் எழுதுவது எப்படி என்ற முறைக்கே கண்ட ப்ரஸ்தாரம் என்று பெயர். இதை எழுதுவது எப்படியெனில் ப்ரஸ்தாரம் எழுதும்போது நமக்கு வேண்டிய த்ருத, லகு, குரு, ப்லுதங்களின் எண்ணிக்கை வரக்கூடிய ப்ரஸ்தாரங்களை மட்டும் முறைப்படி எழுதியும், வேறு வகைப் பிரஸ்தாரங்கள் குறுக்கிட்டால் முதலில் எழுதவேண்டிய கீழ் அங்கத்தை விட்டுவிட்டு அதற்குக் குறைந்த அங்கத்தை எழுதுவது, அதற்கு வலது புறத்தில் உள்ள அங்கத்தின் கீழ் வரிசையை எழுதுவது என்கிற யுக்திகளைக் கையாண்டும் வலதுபுறமுள்ள மேல் அங்கங்களை எழுதிக்கொண்ட பிறகு குறையைப்பூர்த்தி செய்வதற்காக இடது புறம் எழுதும் அங்கங்களை நமக்கு வேண்டிய எண்ணிக்கையுள்ள த்ருதம் முதலியவை ப்ரஸ்தாரத்தில் அமையும்படி எழுதவும் வேண்டும்.

உதாரணமாக, ஒரு ப்லுத அளவுள்ள தாளத்தின் ப்ரஸ்தாரத்தை எடுத்துக்கொள்வோம். முதலில் த்ருதமில்லாத ப்ரஸ்தாரங்களை மட்டும் எழுதுவோம். அப்போது முதல் ப்ரஸ்தாரம் S. அதன் கீழ் இரண்டாவது ப்ரஸ்தாரம் I S. நாம் முறைப்படி ப்ரஸ்தாரம் செய்வோமானால் லகுவின் கீழ் 0 எழுத வேண்டும். ஆனால் நமக்கு வேண்டிய கண்ட ப்ரஸ்தாரத்தில் த்ருதமில்லாத ப்ரஸ்தாரங்களே வேண்டும். ஆகையால் லகுவின் கீழ் த்ருதம் எழுதாமல் அதற்கு அடுத்த வலது பக்கத்திலுள்ள குருவின கீழ் லகுவை எழுதிக் கொள்ள வேண்டும். இப்போது குறையைப் பூர்த்தி செய்து கொள்ள ஒரு குருவை மட்டும் எழுதிக்கொள்ளலாம். அப்போது ப்ரஸ்தாரம் S I என்று அமையும். அடுத்த ப்ரஸ்தாரத்திற்கு குருவின் கீழ் லகுவும், வலது ப்க்கத்தில் மேல் உள்ள லகுவும் குறையைப்

பூர்த்தி செய்துகொள்வதற்கு இடது பக்கத்தில் மற்றொரு லகு போட்டுக் கொள்ளலாம். அதாவது I I I என்று ப்ரஸ்தாரம் அமையும். இதற்குக் கீழ் எப்படி ப்ரஸ்தாரம் செய்தாலும் த்ருதம் வந்தே தீரும். ஆகையால் இதனுடன் ப்ரஸ்தாரத்தை நிறுத்திக் கொள்ள வேண்டும். ஆக நமக்கு 4 த்ருதமில்லாத ப்ரஸ்தாரங்கள் கிடைத்திருக்கின்றன. த்ருதமேரு அட்டவணையில் 6 த்ருத கால அளவையுள்ள தாளத்திற்கான வரிசையில் த்ருதமில்லாத ப்ரஸ்தாரங்கள் 4 என்பது மெய்ப்பிக்கப்படுகிறது. இவ்விதமே, இரண்டு த்ருதமுள்ள ப்ரஸ்தாரங்களைப் போட வேண்டுமானால், ஒவ்வொரு ப்ரஸ்தாரத்திலும் 2 த்ருதங்கள் இருக்க வேண்டும். ஆகையால் முதல் ப்ரஸ்தாரம் 0 0 S என்று அமையும். இரண்டாவது ப்ரஸ்தாரம் குருவின் கீழ் 1. குறையைப் பூர்த்தி செய்வதற்கு குருவை உபயோகப்படுத்தாமல் ஒரு லகுவையும் அதன் பக்கத்தில் 2 த்ருதங்களையும் எழுதிக் கொள்ள வேண்டும். அதாவது இரண்டாவது ப்ரஸ்தாரம் 0 0 I I. மூன்றாவது ப்ரஸ்தாரத்திற்கு லகுவின் கீழ் 0. வலது பக்கத்திலுள்ள லகுவையும் எழுதிக்கொண்டால் குறையைப் பூர்த்தி செய்வதற்கு ஒரு லகுவையும், ஒரு த்ருதத்தையும் எழுதிக் கொள்ளலாம். அதாவது 3வது ப்ரஸ்தாரம் 0 I 0 I. நான்காவது ப்ரஸ்தாரம் I 0 0 I. 5வது ப்ரஸ்தாரம் 0 S 0. 6வது ப்ரஸ்தாரம் 0 I I 0. 7வது ப்ரஸ்தாரம் I 0 I 0 8வது ப்ரஸ்தாரம் S 0 0. 9வது ப்ரஸ்தாரம் I I 0 0. இனி ப்ரஸ்தாரம் செய்தால் இரண்டுக்கு மேற்பட்ட த்ருதங்கள் தான் கிடைக்கும். ஆகவே நமக்கு வேண்டிய கண்டப்ரஸ்தாரத்தில் 9 இரண்டு த்ருதங்களுள்ள பேதங்கள் கிடைக்கின்றன. த்ருத மேரு அட்டவணையிலும் இந்த ஒன்பதைக் கண்டுகொள்ளலாம். இவ்வாறே மற்ற கண்ட ப்ரஸ்தாரங்களையும் எழுதலாம்.

## த்ருதமேருவின் நஷ்டம்

த்ருதமேரு அட்டவணையில் நமக்கு த்ருதமேயில்லாத பேதங்களின் தொகையும் 1, 2, 3 முதலிய த்ருதங்களுள்ள பேதங்களின் தொகையும் நமக்கு கிடைக்கின்றன அல்லவா?

அந்த பேதங்களுள் இத்தனையாவது பேதம் என்ன ? என்ற கேள்விக்கும் அதன் பதிலுக்கும் த்ருதமேருவின் நஷ்டம் என்று பெயர். இதைக் கண்டுபிடிக்கும் வழி வருமாறு:—

கீழிருந்து முதல் வரிசையில்:—

(a) இரட்டைப்படை த்ருதகாலத்திற்குரிய கட்டங்களில் குறிப்பிட்ட பேதங்களில் நஷ்ட பிரச்னை:— வேண்டிய பேதத்தின் வரிசை எண்ணை குறிப்பிட்ட கட்டத்திலுள்ள தொகையிலிருந்து முதலில் கழிக்கவேண்டும். கழித்து வந்த மிச்சத்திலிருந்து அந்த கட்டத்திற்கு முந்திய மூன்றுவது கட்டத்திலுள்ள எண்ணைக் கழிக்கவேண்டும். கழிபட்டால் வேண்டிய பேதத்தில் ஒரு குரு கிடைக்கும். கழிபடாவிட்டால் ஒரு லகு கிடைக்கும். பிறகு மிச்சத்திலிருந்து ஐந்தாவது கட்டத்திலுள்ள எண்ணைக் கழிக்கவேண்டும். கழிபட்டால் முன்பு கிடைத்த குரு ப்லுதமாகிவிடும். முன்பு லகு கிடைத்திருந்தால் அதனுடன் ஒரு குருவும் கிடைக்கும். கழிபடாவிட்டால் முன்பு லகு கிடைத்திருந்தால் மற்றொரு லகு கிடைக்கும். முன்பு குரு கிடைத்திருந்தால் இப்பொழுது கழிபடாததினால் ஒன்றும் கிடைக்காது. இதற்குள் தாளத்தின் கால அளவைக்குரிய அங்கங்கள் கிடைத்துவிட்டால் இதோடு நிறுத்திக் கொள்ள வேண்டும். மேலே கழிப்பதற்கு யாதொரு மிச்சமும் இல்லாமல் கால அளவைக்குரிய அங்கங்களும் பூர்த்தியாகாமலிருந்தால் அதன் குறைவை லகுக்களால் பூர்த்தி செய்து கொள்ளவும். அங்கங்களும் பூர்த்தியாகாமலிருந்து, எண்ணும் மிச்சமிருந்தால் ஐந்தாவது கட்டத்தை அந்தியமாக வைத்துக் கொண்டு அதனுடைய த்ருதீய பஞ்சமங்களிலுள்ள எண்களை முன்போல கழிக்கவும். இப்படியே மிச்சம் இருக்கும் வரையில் அவசியமிருந்தால் செய்யவும்.

உதாரணமாக 8 த்ருதகால அளவையுள்ள தாளத்தின் ப்ரஸ்தாரங்களில் த்ருதமேயில்லாத ப்ரஸ்தாரங்களின் தொகை கீழ் வரிசையிலுள்ள 7. இதில் முதல் ப்ரஸ்தாரத்தின் உருவம் என்ன என்றால் முதலில் ஏழிலிருந்து '1' ஐக்கழிக்க மிச்சம் 6.

அதிலிருந்து த்ருதீயமாகிய '4'ஐக் கழிக்க மிச்சம் 2. கழிபட்ட தனால் ஒரு குரு கிடைக்கிறது. 2லிருந்து பஞ்சமமாகிய '2'ஐக் கழிக்க மிச்சம் பூஜ்யம். பஞ்சமமும் கழிபட்டதனால், முதலில் கிடைத்த குருவானது ப்லுதம் ஆகிறது. மிச்சம் ஒன்றுமில்லாததினால் தாள காலத்தின் குறையைப் பூர்த்தி செய்துகொள்ள இடது பக்கத்தில் ஒரு லகுவைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். இப்படி முதல் ப்ரஸ்தாரம் I S̀ என்று அமைகிறது. 2வது ப்ரஸ்தாரத்தைக் கண்டுபிடிக்க 7லிருந்து '2'ஐக்கழித்து, மிச்சமாகிய '5'லிருந்து த்ருதீய எண் '4'ஐக் கழிக்க மிச்சம் 1. கழிபட்டதால் ஒரு குரு கிடைக்கிறது. '1'லிருந்து பஞ்சமமாகிய '2' கழிபடாது. இதனால் ஒன்றும் கிடைக்காது. இப்போது தாள அங்கங்கள் பூர்த்தியாகாமலும், மிச்சமும் இருக்கிறது. ஆகையால் பஞ்சமத்தை அந்தியமாக வைத்துக் கொண்டு அதன் த்ருதீயமாகிய '1'ஐக் கழிக்க மிச்சம் பூஜ்யம். இப்பொழுது கழிப்பட்டதனால் இன்னொரு குரு கிடைக்கிறது. தாளத்தின் கால அளவும் பூர்த்தியாகிவிட்டது. ஆகவே 2வது ப்ரஸ்தாரம் S S. இவ்வாறே மற்ற பேதங்களையும் கண்டுகொள்க.

(b) ஒற்றைப்படை த்ருத காலத்திற்குரிய கட்டங்களில் குறிப்பிட்ட ப்ரஸ்தாரத் தொகைகளில் நஷ்டம்:— இதற்கு இந்த 'நூலின்' 26ம் பக்கம் அடிக்குறிப்பில் ஸர்வ ப்ரஸ்தார நஷ்டத்திற்குச் சொல்லப்பட்ட முறையையே உபயோகிக்கவேண்டும். அதாவது முதலில் அந்தியத்திலிருந்து நஷ்ட எண்ணைக் கழித்து, மிச்சத்திலிருந்து அதற்கு முந்தியுள்ள ஒவ்வொரு எண்ணையும் கழித்துக் கொண்டே வரவேண்டும். கழிபட்ட எண்ணிலிருந்து லகுவும், கழிபடாத எண்ணிலிருந்து த்ருதமும், சேர்ந்தாற்போல் இரண்டு எண்கள் கழிபட்டால் குருவும் கிடைக்கும். குருவுக்குப் பிறகு அதற்கடுத்த மூன்றாவது எண் கழிபட்டால் குரு ப்லுதமாகிவிடும். லகுவுக்குப் பிறகு ஒரு எண் கழிபடாமலிருந்தால் அதனால் கிடைக்கும் த்ருதத்தைச் சேர்த்துக் கொள்ளக்கூடாது. ப்லுதம் குரு இவைகளுக்குப் பிறகு இரண்டு எண்கள் கழிபடாமலிருந்தாலும் அதனால்

கிடைக்கும் த்ருதங்களையும் சேர்த்துக் கொள்ளக்கூடாது. சர்வ பிரஸ்தாரமுறையில் நஷ்டத்தைக் கண்டுபிடித்துக் கொண்டு வரும்பொழுது ஒரு த்ருதம் கிடைத்துவிட்டால் அதற்குப்பிறகு த்ருதமேருவில் இரட்டைப்படை வரிசைக் கட்டங்களில் நஷ்டத்தைக் கண்டுபிடிப்பதற்காக ஏற்பட்ட விதியை அனுசரிக்க வேண்டும். உதாரணமாக 7 த்ருத கால அளவுள்ள தாளத்தில் ஒரு த்ருதமுள்ள ப்ரஸ்தாரங்கள் 12 என்பது நமக்கு த்ருத மேரு அட்டவணையிலிருந்து தெரிகிறது. இவற்றுள் முதல் ப்ரஸ்தாரம் என்ன என்ற கேள்விக்கு விடையளிக்க 12லிருந்து நஷ்ட எண்ணாகிய '1'ஐக் கழிக்க மிச்சம் 11. அதிலிருந்து அதற்கு முந்திய '4' ஐக் கழிக்க மிச்சம் 7. ஒரு லகு கிடைக்கிறது. அதிலிருந்து அதற்த முந்திய '5'ஐக் கழிக்க மிச்சம் 2. லகு குருவாகிறது. அதிலிருந்து அதன் மூன்றுவது எண்ணாகிய '2'ஐக் கழிக்க மிச்சம் பூஜ்யம். மூன்றுவது எண் கழிபட்டதனால் குரு ப்லுதமாகிறது. குறைவைப் பூர்த்தி செய்ய ஒரு த்ருதத்தைப் போட்டுக் கொண்டால் முதல் பேதம் 0 S என்று அமைகிறது.

மற்றொரு உதாரணம்:—மேற்படி கட்டத்திலேயே 11வது பேதம் என்ன என்ற கேள்விக்குவிடையளிக்க 12லிருந்து நஷ்ட எண்ணாகிய '11'ஐக் கழிக்க மிச்சம் 1. அதிலிருந்து அதற்கு முந்திய எண்ணாகிய '4'ஐக்கழிக்கவேண்டும். கழிபடாததினால் ஒரு த்ருதம் கிடைக்கிறது. த்ருதம் கிடைத்து விட்டதனால் பேதத்தின் மற்ற அங்கங்களைக் கண்டுபிடிக்க இரட்டைப்படை வரிசைகளில் கையாண்டமுறையை உபயோகப்படுத்தவேண்டும். '4'ஐ அந்தியமாக வைத்துக்கொண்டு அதன் த்ருதீயத்தி லுள்ள '2'ஐ '1'லிருந்து கழிக்கவேண்டும். கழிபடாததினால் ஒரு லகு கிடைக்கிறது. அதன் பிறகு பஞ்சமமாகிய '1'ஐக் கழிக்க மிச்சம் பூஜ்யம். கழிபட்டதனால் ஒரு குரு கிடைக்கிறது. 11வது பேதம் S I 0 என்று அமைகிறது. இவ்வாறே மற்ற ஒற்றைப் படைக் கட்டங்களிலும் நஷ்டத்தைக் கண்டு கொள்ளலாம்.

## கீழிருந்து முதல் வரிசையைத் தவிர மற்ற வரிசைகளில்

இந்தக்கட்டங்களில் நஷ்டத்தைக்கண்டுபிடிக்க, கீழிருந்து முதல் வரிசையில் இரட்டைப்படை த்ருத காலத்திற்குரிய கட்டங்களுக்குச் செய்தது போல் த்ருதிய, பஞ்சமங்களிலுள்ள எண்களைக் கழிக்க வேண்டும். அதோடு உபாந்தியத்தின் கீழ் எண்ணையும் கழித்தல் வேண்டும். கழிபட்டால் லகு கிடைக்கும். கழிபடாவிட்டால் த்ருதம் கிடைக்கும். ப்ரஸ்தாரத்தின் அங்கங்கள் பூர்த்தியாகாமல் இருந்து மிச்சமும் இருந்தால் பஞ்சமத்தை அந்தியமாக வைத்துக்கொண்டு மறுபடியும் முன்போல் கழித்துக்கொண்டு வரவேண்டும். அந்தியமாக வைத்துக் கொள்ளும் பஞ்சமம் ஒற்றைப்படை த்ருத வரிசையில் இருந்தால் கீழ் வரிசையில் ஒற்றைப்படைக்குச் செய்ததுபோலவும் இரட்டைப்படை வரிசையிலிருந்தால் கீழ் வரிசை இரட்டைப் படைக்குச் செய்தது போலவும் கழிக்க வேண்டும்.

உதாரணம்:—ஆறு த்ருத கால அளவுள்ள தாளத்தின் ப்ரஸ்தாரங்களில் இரண்டு த்ருதமுள்ள பேதங்கள் 9 என்பது நமக்கு த்ருதமேரு அட்டவணையிலிருந்து தெரிகிறது. அவற்றுள் முதல் பேதம் என்ன? என்ற கேள்விக்குப் பதிலளிக்க, முதலில் 9லிருந்து நஷ்ட எண்ணாகிய '1'ஐக் கழிக்க வேண்டும். மீதி 8. அதிலிருந்து அதனுடைய உபாந்தியத்தின் கீழ் எண்ணாகிய '5'ஐக் கழிக்க மீதி 3. கழிபடுவதனால் ஒரு லகு கிடைக்கிறது. 3லிருந்து த்ருதீயமாகிய '3'ஐக் கழிக்க மிச்சம் பூஜ்யம். கழிபடுவதனால் லகு குருவாகிறது. கழிப்பதற்கு மேலும் எண் மிச்சம் இல்லாததினால் தாளத்தின் குறைப் பூர்த்தி செய்ய 2 த்ருதங்களைப் போட்டுக் கொள்ள வேண்டும். இப்பொழுது முதல் பேதம் 0 0 S என்று அமைகிறது.

### த்ருதமேருவின் உத்திஷ்டம்.

நஷ்டத்தில் எந்த எண் கழிபட்டதனால் நமக்குத் தாளத்தின் அங்கங்கள் கிடைத்தனவோ அந்த எண்களை யெல்லாம் கூட்டி மொத்த ப்ரஸ்தாரத் தொகையிலிருந்து கழிக்க பேதத்தின் எண் வரிசை கிடைக்கும்.

கீழிருந்து முதல் வரிசையில்

(a) இரட்டைப்படை த்ருத வரிசைக் கட்டங்களில் உதாரணம்

எட்டு த்ருத கால அளவுள்ள தாளத்தின் ப்ரஸ்தாரங்களில் த்ருதமேயில்லாத பேதங்களில் 11S என்ற உருவமுள்ள பேதத்தின் வரிசை எண்ணைக் கண்டுபிடிப்போம். முதலில் குரு இருப்பதனால் அது த்ருதிய எண்ணாகிய '4' கழிபட்டதனால் கிடைத்திருக்கவேண்டும். ஆகையால் அதை எடுத்துக் கொள்ளவேண்டும். லகுக்கள் கழிபடாத எண்களால் கிடைத்தவை. ஆகையால் அவற்றிற்கான எண்களைச் சேர்த்துக் கொள்ளக்கூடாது. இப்பொழுது மொத்த பேதங்களின் தொகையான '7'லிருந்து '4'ஐக் கழிக்க மீதி 3. ஆகையால் குறிப்பிட்ட ப்ரஸ்தாரம் த்ருதமேயில்லாத பேதங்களில் மூன்றாவதாகும்.

(b) ஒற்றைப்படை த்ருத வரிசைக் கட்டங்களில் உதாரணம்:—

7 த்ருதகால அளவுள்ள தாளத்தின் ப்ரஸ்தாரங்களில் ஒரு த்ருதமுள்ள பேதங்களின் தொகை 12 அவற்றுள் 0111 என்ற உருவமுள்ள பேதத்தின் வரிசை எண்களைக் கண்டுபிடிப்போம்.

இதற்கு ஸர்வ ப்ரஸ்தாரங்களுக்கு உத்திஷ்டம் கண்டு பிடிக்கும் முறையையே பின்பற்ற வேண்டும். முதலில் லகு இருக்கிறது. ஆகையால் அது உபாந்திய எண்ணாகிய '4' கழிபட்டதனால் கிடைத்திருக்கவேண்டும். அதன் பிறகு மற்றொரு லகு இருக்கிறது. நடுவில் ஒரு எண் கழிபடாததினால் தான் மற்றொரு லகு கிடைத்திருக்கிறது. கழிபட்டிருந்தால் முதலில் இருந்த லகு குருவாகியிருக்கும். ஆகையால் உபாந்தியத்திற்கு முந்திய எண்ணாகிய '5'ஐ விட்டுவிடவேண்டும். அதற்கு முந்திய '2'ஐச் சேர்த்துக்கொள்ளவேண்டும் அதன் பிறகு மற்றொரு லகு இருக்கிறது. இதற்காகவும் பஞ்சம எண்ணாகிய

"2'ஐ விட்டுவிட்டு ஷஷ்டமாகிய '1'ஐச் சேர்த்துக் கொள்ள வேண்டும். அதன் பிறகு உள்ள த்ருதம் கழிபடாத எண்ணி லிருந்து கிடைத்திருக்கவேண்டும். ஆகையால் அதற்காக ஒரு எண்ணையும் சேர்த்துக் கொள்ளக்கூடாது. இப்பொழுது கழிபட்ட எண்களாகிய 4, 2, 1 இவைகளைக் கூட்டி மொத்த பேதங்களாகிய 12லிருந்து கழிக்க மிச்சம் 5. குறிப்பிட்ட ப்ரஸ்தாரம் ஒரு த்ருதமுள்ள பேதங்களில் ஐந்தாவதாகும்.

கீழ் முதல் வரிசையைத் தவிர மற்ற வரிசைக் கட்டங் களில் உதாரணம்:

ஆறு த்ருத கால அளவுள்ள தாளத்தின் ப்ரஸ்தாரங்களில் இரண்டு த்ருதங்களுள்ள பேதங்களின் தொகை 9. அவற்றுள் 0 0 S என்ற பேதத்தின் எண் வரிசையைக் கண்டுபிடிப்போம்.

முதலில் குரு இருக்கிறது. இது சேர்ந்தாற்போல் இரண்டு எண்கள் கழிபட்டதனுல் கிடைத்திருக்க வேண்டும். அதாவது உபாந்தியத்தின் கீழ் எண்ணுகிய '5'ம் த்ருதீய எண்ணுகிய '3'ம் கழிபட்ட எண்களாகையால் அவற்றைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். அதன் பிறகு உள்ள 2 த்ருதங்கள் கழிபடாத எண் களிலிருந்து கிடைத்தவை. ஆகையால் அவற்றிற்காக எண் களைச் சேர்த்துக்கொள்ளக் கூடாது. இப்பொழுது கழிபட்ட எண்களாகிய '5'ஐயும் '3'ஐயும் கூட்டி மொத்தத் தொகையான 9லிருந்து கழிக்க மீதி 1. ஆகையால் ஆறு த்ருத கால அள வுள்ள தாள ப்ரஸ்தாரங்களில் இரண்டு த்ருதமுள்ள பேதங் களில் குறிப்பிட்ட பேதம் முதலாவதாகும்.

### லகுமேருவின் நஷ்டம்

கீழிருந்து முதல் வரிசையில்:

இந்த வரிசையிலுள்ள கட்டங்களில் லகுவேயில்லாத பேதங்களின் தொகைகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இதில் நஷ்டத்தைக் கண்டுபிடிக்க அந்தியத்திலிருந்து நஷ்ட ப்ரச்னை எண்ணைக் கழித்து மீதியிலிருந்து அதற்கு முந்திய கட்டங்களி

னுள்ள எண்களை வரிசையாக கழித்துக் கொண்டு வரவேண்டும். அப்பொழுது ஒரு எண் கழிபடாவிட்டால் த்ருதம் கிடைக்கும். கழிபட்டால் குரு கிடைக்கும். கழிபட்ட எண்ணினால் ஒரு குரு கிடைத்து அடுத்து ஒரு எண்ணோ அல்லது இரண்டு எண் களோ கழிபடாமலிருந்தால் அதற்காக த்ருதங்களைச் சேர்த்துக் கொள்ளக் கூடாது. ஒரு குரு கிடைத்து அடுத்து ஒரு எண் ணோ அல்லது இரண்டு எண்களோ கழிபடாமலிருந்து அதற் கடுத்த எண் கழிபட்டால் முதலில் கிடைத்த குரு ப்லுதமாகி விடும். இரண்டு எண்களுக்கு மேல் மூன்றாவது எண்ணும் கழிபடாமலிருந்து நான்காவது எண் கழிபட்டால் மற்றொரு குரு கிடைக்கும்.

உதாரணம்:— 6 த்ருத கால அளவுள்ள தாளத்தின் ப்ரஸ்தாரங்களில் லகுவேயில்லாத பேதங்கள் 5 என்பது லகு மேரு அட்டவணையிலிருந்து தெரிகிறது. இதில் 3 வது பேதம் என்ன? என்ற கேள்விக்குப் பதிலளிப்போம்

முதலில் மொத்த பேதத்தொகையான '5'லிருந்து நஷ்ட எண்ணாகிய '3'ஐக் கழிக்க மிச்சம் '2'. மீதியிலிருந்து '5'க்கு மூந்திய எண்ணாகிய '3'ஐக் கழிக்கவேண்டும் கழிபடாததினால் ஒரு த்ருதம் கிடைக்கிறது. பிறகு அதற்கு மூந்திய எண்ணாகிய '2'ஐ 2லிருந்து கழிக்க வேண்டும். மிச்சம் பூஜ்யம். கழிபட்ட தனால் ஒரு குரு கிடைக்கிறது தாளத்தின் அங்கங்கள் பூர்த்தி யாகவில்லையாகையால் குறையைப் பூர்த்தி செய்ய ஒரு த்ருதத் தைப் போட்டுக் கொள்ள வேண்டும். இவ்விதம் மூன்றாவது பேதம் 0 S 0 என்று அமைகிறது.

கீழிருந்து முதல் வரிசையைத் தவிர மற்ற வரிசைகளில்:

"இதற்கு முதலில் மொத்த பேதங்களின் தொகையி லிருந்து நஷ்ட எண்ணைக் கழித்துப் பிறகு த்விதீயம், த்ருதீயத் தின் கீழ் உள்ள எண், பஞ்சமம் இவைகளைக் கழிக்கவேண்டும். இவ்வாறு கழித்துக்கொண்டு வரும்பொழுது எண் கழிபடா விட்டால் த்ருதமும், கழிபட்டால் லகுவும் கிடைக்கும். ஒரு

லகு கிடைத்துவிட்டால் அதன் பிறகு கழிக்கப்படவேண்டிய எண்களை அதன் கீழ் வரிசையிலிருந்து எடுத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு செய்யும்பொழுது அந்தக் கீழ் வரிசைக்கான விதியை அனுசரிக்கவேண்டும். அங்கங்கள் பூர்த்தியாகாமல் கழிப்பதற்கு எண் மிச்சமும் இருந்தால் முன்போலவே மறுபடியும் வரிசைக் கிரமமாகக் கழித்துக்கொண்டு வரவேண்டும். எண் மிச்சமில்லாமலிருந்தால் குறையை வேண்டிய அளவு லகுக்களால் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும்." இது சங்கீத ரத்னாகரத்தில் உள்ள பகுதி (5வது அத்தியாயம் சுலோகம் 398-401) யிலிருந்து கிடைக்கிறது. ஆனால் இந்த முறையில் பல மாறுதல்கள் செய்தாலொழிய இதன்படி கழித்துப் பார்த்தால் நஷ்ட பேதத்தின் உருவம் சரியாகக் கிடைக்கவில்லை. உரையாசிரியர்களான கல்லிநாதர், ஸிம்ஹபூபாலர் இவர்களின் உரைப்படியும் வேண்டிய பேதத்தின் உருவம் கிடைக்கவில்லை.

## குருமேரு நஷ்டம்

கீழிருந்து முதல் வரிசையில்:

இதற்கு, முதலில் மொத்த பேதத் தொகையிலிருந்து நஷ்ட எண்ணைக் கழித்துக் கொண்டு, பிறகு அதற்கு முன்னுள்ள எண்களை சர்வ பிரஸ்தார நஷ்டத்துக்குக் கழிப்பது போல் வரிசையாகக் கழித்துக்கொண்டு வரவேண்டும். ஆனால் கிடைக்கும் குருவை ப்லுதமாக எழுதிக்கொள்ள வேண்டும். உதாரணம்:— 6 த்ருத கால அளவுள்ள தாளத்தின் பிரஸ்தாரங்களில் குருவேயில்லாத பேதங்கள் 14 என்பது குருமேரு அட்டவணையிலிருந்து தெரிய வருகிறது. இதில் முதல் பேதம் என்ன? என்ற கேள்விக்குப் பதிலளிப்போம்.

முதலில் மொத்த பேதங்களின் தொகையான '14'லிருந்து நஷ்ட எண்ணாகிய '1'ஐக் கழிக்க மீதி 13. இதிலிருந்து '14'க்கு முந்திய எண்ணாகிய '8'ஐக் கழிக்க மீதி 5. கழிபடுவதினால் ஒரு லகு கிடைக்கிறது. மீதியிலிருந்து அதற்கு

முந்திய எண்ணாகிய '5'ஐக் கழிக்க பூஜ்பம். இப்பொழுது முதலில் கிடைத்த லகு குருவாகிறது. குருவை ப்லுதமாக மாற்றிக்கொள்ள வேண்டும். முதல் பேதம் S என்று ஏற்படும்.

கீழ்முதல் வரிசையைத் தவிர மற்ற வரிசைகளில் :

லகுமேருவில் கீழ் முதல் வரிசையைத் தவிர மற்ற வரிசைகளில் நஷ்டத்தைக் கண்டுபிடிக்க அனுசரித்த விதியையே உபயோகிக்க வேண்டும். ஆனால் த்ருதீயத்தின் கீழ் எண்ணை எடுத்துக் கொள்வதற்குப் பதிலாக அதே வரிசை த்ருதீயத்திலுள்ள எண்ணை எடுத்துக்கொள்ள வேண்டும். அதே வரிசை பஞ்சமத்திற்குப் பதிலாக பஞ்சமத்தின் கீழ் எண்ணை எடுத்துக் கொள்ள வேண்டும். அங்கங்கள் பூர்த்தியாகாமலிருந்தால் குருவைப் போட்டுக் கொள்ள வேண்டும்.

உதாரணம் :— 6 த்ருத கால அளவுள்ள தாளத்தின் ப்ரஸ்தாரங்களில் ஒரு குருவுள்ள பேதங்கள் 5. இதில் முதல் பேதம் என்ன ? என்ற கேள்விக்குப் பதிலளிப்போம். '5'லிருந்து நஷ்ட எண்ணாகிய '1'ஐக் கழிக்க மீதி 4. மீதியிலிருந்து முந்திய எண்ணாகிய '2'ஐக் கழிக்க மீதி 2. ஒரு லகு கிடைக்கிறது. '2'லிருந்து த்ருதீயமாகிய '1'ஐக் கழிக்க மீதி 1. முதலில் கிடைத்த லகு குருவாகிறது. '1'லிருந்து பஞ்சமத்தின் கீழ் எண்ணாகிய '2'ஐக் கழிக்க வேண்டும். கழிபடாததினால் ஒன்றும் கிடைக்கவில்லை. பிறகு '2'க்கு முந்திய எண்ணாகிய '1'ஐக் கழிக்க மீதி பூஜ்யம். கழிபடுவதினால் ஒரு லகு கிடைக்கிறது. முதல் பேதம் I S என்று அமைகிறது.

## ப்லுதமேரு நஷ்டம்

கீழிருந்து முதல் வரிசையில் :

இதற்கு ஸர்வ ப்ரஸ்தார நஷ்டத்திற்குச் செய்தபடி வரிசையாகக் கழித்துக்கொண்டு வரவேண்டும்.

உதாரணம் :— 6 த்ருத கால அளவுள்ள தாளத்தின் ப்ரஸ்தாரங்களில் ப்லுதமேயில்லாத பேதங்கள் 18 என்று ப்லுத

மேருவிலிருந்து தெரிகிறது. இதில் 2வது பேதம் என்ன என்ற கேள்விக்குப் பதிலளிப்போம். முதலில் மொத்த பேதங்களின் தொகையான 18லிருந்து நஷ்ட எண்ணாகிய '2'ஐக் கழிக்க மீதி 16. '16'லிருந்து முந்திய எண்ணாகிய '10'ஐக் கழிக்க மீதி 6 ஒரு லகு கிடைக்கிறது. '6'லிருந்து முந்திய எண்ணாகிய '6'ஐக் கழிக்க மீதி பூஜ்யம். முதலில் கிடைத்த லகு குருவாகிறது. தாளத்தின் அங்கங்கள் பூர்த்தியாகாமலிருப்பதால் குறைவைப் பூர்த்தி செய்ய 2 த்ருதங்களைப் போட்டுக்கொள்ள வேண்டும். 2வது பேதம் 0 0 S என்று அமைகிறது.

கீழ் முதல் வரிசையைத் தவிர மற்ற வரிசைகளில்:

இதற்கு குருமேருவுக்குச் செய்ததுபோல் கழிக்க வேண்டும். அதே வரிசையில் கடைசி கட்டம் வரையில் கழித்துக் கொண்டு போகும்போது கடைசி கட்டத்தில் த்ருதமோ, லகுவோ, குருவோ கிடைத்தால் அது ப்லுதமாகி விடும். ப்லுதம் கிடைத்துவிட்டால் கீழ் வரிசையில் ஆதியிலிருந்து 6 எண்கள் தாண்டி 7வது எண்ணிலிருந்து மறுபடி கழிக்க ஆரம்பிக்க வேண்டும்.

உதாரணம்:— 8 த்ருத கால அளவுள்ள தாளத்தின் ப்ரஸ்தாரங்களில் ஒரு ப்லுதமுள்ள பேதங்கள் 5. இதில் முதல் பேதம் என்ன என்ற கேள்விக்கு விடை கண்டுபிடிப்போம். முதலில் '5'லிருந்து நஷ்ட எண்ணாகிய '1'ஐக் கழிக்க மீதி 4. '4'லிருந்து முந்திய எண்ணாகிய '2'ஐக் கழிக்க மீதி 2. கழிபடுவதனால் ஒரு லகு கிடைக்கிறது மீதியிலிருந்து அதன் முந்திய எண்ணாகிய '1'ஐக் கழிக்க மீதி 1. முதலில் கிடைத்த லகு குருவாகிறது. அதே வரிசைக் கடைசி கட்டத்தில் குரு கிடைப்பதால் குருவை ப்லுதமாக மாற்றிக்கொள்ள வேண்டும். மீதியிலிருந்து கீழ் வரிசையிலுள்ள 7வது எண்ணாகிய '2'ஐக் கழிக்க வேண்டும். கழிபடாததினால் அதற்கு முந்திய எண்ணாகிய '1'ஐக் கழிக்க வேண்டும். மீதி பூஜ்யம். கழிபடுவதனால் ஒரு லகு கிடைக்கிறது. முதல் பேதம் I S என்று அமைகிறது.

த்ருத, லகு, குரு, ப்லுத மேருக்களின் உத்திஷ்டம்.

இவைகளுக்கு உத்திஷ்டம் கண்டுபிடிக்க ஸர்வ ப்ரஸ்தார உத்திஷ்டத்திற்கு அனுஸரித்த வழியையே அனுஸரிக்க வேண்டும். இந்த மேருக்களில் அந்தந்த வரிசைக்கு உத்திஷ்டம் கண்டுபிடிக்க நஷ்டத்தில் கழிபட்ட எண்களைக் கூட்டி மொத்த பேதத் தொகையினின்றும் கழிக்க பேதத்தின் எண் வரிசை கிடைக்கும்.

இவ்விதம் தாள ப்ரஸ்தாரத்தைச் சேர்ந்த கண்ட ப்ரஸ்தாரம், த்ருத மேரு, லகு மேரு, குரு மேரு, ப்லுத மேரு, ஸம்யோக மேரு இவற்றின் நஷ்ட உத்திஷ்டங்கள் இவை ஸங்கீத ரத்னாகரத்தில் கண்டபடி விளக்கப்பட்டிருக்கின்றன.

தாளத்தைப் பற்றிய இந்த அரிய பெரிய நூலும் அதைப் பூரணம் செய்யும் இம்முகவுரையும் ஸங்கீத வித்வான்களுக்கும், ஆராய்ச்சியாளர்களுக்கும் பெரிதும் உதவுமென நம்புகிறேன்.

ஸரஸ்வதி மஹால்,
தஞ்சை,
31—1—'55.

K. வாஸுதேவ சாஸ்திரிகள்.
ஆராய்ச்சி ஆசிரியர்.

# தாள சமுத்திரம்



### காப்பு

வேழமுகத்து விநாயகனைத் தொழ
வாழ்வு மிகுத்து வரும்.

ஆள வருந்துரித[1] திரியக்கண்[2] ணல்வாய்[3]த்
தாளசமுத்திர நூற்றண் டமிழ்க்கு—நாளுந்
தடதவளத் தந்தத் தருண கிரணக்
கடகவளக் கைக்களிறே காப்பு. (1)

### பாயிரம்

திண்மை பெரிய திருவடி நாயன் மங்கை
வண்மை இருங்கேள் வளநாடன்—மண்மகள்சேர்
தோள் துணைவன் பரதசூடாமணி யுரைத்தான்
தாள சமுத்திர நூல்தான். (2)

தென்றல் வடிவுஞ் சிவனார் திருவடிவு
மன்றல் வடிவு மதன்வடிவுங்—குன்றாத
வேயினிசை வடிவும் வேதவடிவுங் காணி
லாய தாளங் காணலாம். (3)

ஆதிபரதத்தரிதான தாள நூல்வகை கேட்குமிடத்துச் சதுர்மேருப் பிறப்பென்றும், சண்மேருப் பிறப்பென்றும், நட்டோத்திட்ட பாதாளமென்றும், சர்வ பாதாளமென்றும், சையோகமென்றும்,[4]

---

1. துரித = (த்விரத-யானை) யானை முகத்தையுடைய.
2. திரியக்கண் = மூன்று கண்கள்.
3. நால்வாய் = தொங்குகின்றவாய்.
4. இவை தாள பிரஸ்தார வகை.

பதமுக முருமுகமென்றும், பஞ்சமுகமென்றும்,[5]

கணம், லவம், காட்டை, நிமிடம், துடி, துரிதம், லகு, குரு, புலுதம் காகபாதமென்றும்,[6]

சீர்பொலி உருவம் தெய்வங் குணமோத்துப்
பார்பேர் பிறப்புப் பழங்கணம் — மேற்போன
சாதிகரத்தே யிசையும் தாளவியத்தே கிரகம்
ஓதுமீ ராறே யுறும்[7] (4)

இதனுட்பட்ட தின்னதென்றும், காலம், கிரியா, மானம், அளக்கு மரபென்றும்,[8]

கலை, கலாந்திரமென்றும்,[9]

தெட்சிணம், வார்த்திகம், சித்திரம். சித்திரதரம், சித்திர தமம், அதி சித்திரமென்றும்,[10]

ஆவாபம், நிஷ்கிராமம், விக்ஷேபம், பிரவேசம், சம்பை, தாளம், துருவம் சன்னிபாதமென்றும்[11]

---

5. இவை எதைக் குறிக்கின்றன என்பது விளங்கவில்லை.
6. இவை கால அளவைகள்.
7, சரஸ்வதிமகால் சுவடியில் ஏடுமுறிந்த இடங்கள் மதராஸ் O. M. லைப்ரரி நெ. R. 518 சுவடியிலிருந்து பூர்த்தி செய்யப்பட்டிருக்கின்றன.
8. காலம், க்ரியா, மானம் — இவை தாளத்தின் 10 அம்சங்களில் முக்கியமான மூன்று. "க்ரியையாகிற தாளம் போடுதலும். மானம் என்கிற அளவும் சேர்ந்தால் காலமே தாளமாகிறது.''— ஸங்கீத தர்ப்பணம். 6வது அத். சு. 624.
9. 'கலை' என்பது தாளத்தின் ஒவ்வொரு பகுதியிலும் உள்ள உட்பகுதிகளின் எண்ணிக்கை.
10. தெட்சிணம், வார்த்திகம், சித்ரம், சித்ரதமம், சித்ரதரம், அதி சித்திரம் என்பவை பலநாடுகளில உள்ள மார்க்கபேதங்கள், அதாவது கால அளவையின் வகைகள்.
11. ஆவாபம் முதலிய நான்கும், சம்பை முதலிய நான்கும் தாளக் கிரியைகள். முதல் நாலிலும் சத்தமில்லாமல் கை அசைக்கப் படுகிறது. பிந்திய நாலிலும் சத்தத்துடன் தாளம் போடப்படுகிறது.

மார்க்கதாளம், தேசிதாளம், சங்கீர்ணதாளம், என்றும், சுத்ததாளம், சாளகம், சங்கீர்ண தாளம் என்றும், [12]

வட்டளவு, குமிழளவு, துணையளவு, நாணளவு, விரலள வென்றும், [13]

சமம், அதீதம், அனகதம், விஷமகிரகமென்றும், [14]

ஏகச்சிரம், ஏககண்டச்சிரம், துரியச்சிரம், துரியகண்டச் சிரம், திரியச்சிரம், சதுரச்சிரம், சதுரகண்டச்சிரம், மிச்சிரம், மிச்சிரகண்டச்சிரம் என்றும் [15]

துரித கதி, மத்திமகதி, விளம்பிதகதி யென்றும் [16]

மகணம், ரகணம், ஸகணம், ஜகணம், பகணம், யகணம், நகணம், தகணம் மென்றும், [17]

இந்த எட்டுறுப்பின் குணம், குணதோஷமென்றும்,

உத்தம தெய்வம், மத்திமதெய்வம், அதமதெய்வமென்றும்,

சமை, சுரோதோவகை, கோபுச்சை, யாகிய 'யதி' யென் னும்லயத் தொகுதி யென்றும்,

இப்படிச் சொல்லப்பட்ட கிரமத்தால் வருகிற தாள வகை விரியும்வாறு கண்டுகொள்க.

---

12. மார்க்கம், தேசி, ஸங்கீர்ணம் - சுத்தம், ஸாளகம், ஸங்கீர்ணம் என்ற இருவகைப் பிரிவும் தாளங்களின் வகைக்குப்பெயர்.

13. வட்டளவு முதலியன கைத்தாளமென்னும் கனவாத்தியத்தின் அளவுகள்.

14. சமம் முதலியன நான்கும் தாளத்தில் பாட்டு ஆரம்பிக்கும் இடத்தைக்குறிக்கும் 'க்ரஹம்' என்பதாகும்,

15. இவை தாளத்தின் நடையைக்காட்டும் தாள ஜாதிகளின் பெயர்.

16. தாளத்தின் வேகங்கள்.

17. இந்த 8 கணங்களும் 3 அங்கங்கள் சேர்ந்த குரு, லகுக் கோவைகள்,

## நூலின் பொருளடக்கம்

தாள சமுத்திரம் தான் இன்னதென்று வகுப்போ மென்ப தற்கு வருமாறு:—

ஏய்ந்த நெடுந்தாளம் இரண்டெழுத்தின் சீர்பேர்கள்
சேர்ந்த அளவுருவம் தெய்வங்கள்—வாய்ந்தகுணம்
பேர்பெறவே யொத்தும் பிரமாணம் கணம்சாதி
பேர்சதுர மேருப் பிறப்பு. (5)

பேர்உயர் சண்மேருப் பிறப்புப் பிரிந்திலய
மாறில்லா நல்லயதி மார்க்கங்கள்—கூறும்
ஒருமாத்திரை மான மொத்தும் கிரகம்
திருவாய்த்த கஞ்சதளச் சீர். (6)

மெச்சு மணிக்கட்டு விரற்றெய்வம் வெவ்வேரு
யிச்சை பெறு தாள மியற்றுவகை — சச்சபுடத்
தாளமுதல் நூற்றெட்டுத்தாள நிலைப் பிரபந்தம்
நீளிருப தென்றூர் நினைந்து. (7)

என்றது இந்த மூன்று வெண்பாவிலும் சொல்லியதேதோ வென்னில்,

1. தாளமென்கிற இரண்டெழுத்தின் விதி,
2. கணமுதல் வருகிற காலவடிவின் பெயர்கள்,
3. அந்த வடிவினளவு,
4. அந்த வடிவின் சொரூபங்கள்,
5. அந்த வடிவுகளுக்கு அதிபதியாகிய தேவதைகள்,
6. அந்தச் சொரூபங்கள் நிற்கும் குணகுணங்கள்,
7. அந்தச் சொரூபங்களையொத்து மங்குலப் பிரமாணங்கள்,
8. அஷ்டகணம்,
9. பிரும, க்ஷத்திரிய, வைசிய சூத்திரனென்கிற நாலுசாதிகளும்,

10. சதுர் மேருப்பிறப்பாகிய துரிதாதிபிரஸ்தாரம், சண் மேருப்பிரஸ்தாரமாகிய விராமாதிப் பிரஸ்தாரம்,

11. லயம்,

12. யதி,

13. மார்க்கங்கள்,

14. ஏக மாத்திராலக்ஷணவிதி,

15. சமம், அதீதம், அனாகதமென்று சொல்லப்பட்ட கிரகத் திரயங்கள்,

16. ஓத்தப்பட்ட கஞ்சதாள (காம்ஸ்யதாள)ப் பிரமாணம்,

17. மணிக்கட்டுக்கும், விரலுக்கும் அதிதேவதைகள்,

18. தாள் வொத்தாகிய ஆவாபாதிக் கிரியை,

19. சச்சபுட முதலாகிய நூற்றெட்டுத்தாளவடிவு,

20. நிலைபெற்றுவருகிற புஷ்பபுடப்பிரபந்தம்

ஆக இந்த இருபது கருமங்களையும் சொல்வோமென்ற வாறு.

## 1. தாளம் என்ற சொல்லின் பொருள்

தாளமிரண்டெழுத்தின் தன்பெருமை தன்னைமிக
வாளகிரிசூழும் மகிதலத்தீர் — கேளீர்
தகரஉருச் சொக்கனார்தனியாம் ளகரம்
பகருமங்கயற்கண்ணி பற்று (8)

என்பது தாளமென்கிற இரண்டெழுத்தில் தகாரச்சுருபம் அழகிய சொக்கனார்[1] ளகாரச்சுருபம் அங்கயற்கண்ணியார்[2] உபயச் சுருபங் கூட்டாய் வரவே தாளமென்று பேராயிற்று.

---

1. சொக்கனார் = சொக்கும்படிச்செய்பவர், சுந்தரர்.
2. அம்கயல்கண்ணி = மீனாக்ஷி.

வாய்ந்த காலங் கிரியை மானமிவைகூடி
ஆய்ந்துவரிற் றாளமாமென்றார் — பூந்தொடிகேள்
கட்டுப்பெருங்காலம் கணுதி ஒத்துக்கை கிரியை
நட்ட னடுமானமென நாட்டு (9)

என்பது காலம், கிரியை, மானம் கூடித்தாளமென்னும் பேராயிற்று.

'காலம்' என்பது கணுதிகளாக வருகிற காலவடிவின் பேர்கள்.

'கிரியை' யென்பது ஒத்துதல், ஒத்தித்தூக்குதல், ஒத்திச் சுழித்துத் தூக்குதல், இடம், வலம், மேல் கீழ் கைகாட்டல்.

'மானம்' என்பது ஒத்து முதலாகிய கிரியைகளுக்கு நடு நடுவருகிற சூனிய காலங்களாமென்றவாறு.

## 2. காலம் - அதன் பிரிவுகள்

கடியகணமிலவம் காட்டை நிமிடம்
துடிதுரிதந் தூயலகுத் தொன்மை — நெடிய
குருப்புலிதங் காகுவெனக் கூர்வடிவு பத்தும்
விரும்பவே காலமென வேண்டு. (10)

என்றது கணம், லவம், காட்டை, நிமிடம், துடி, துரிதம், லகு, குரு, புலிதம், காகபாதம் என்னும் பத்துவடிவும் காலங்களாமென்றவாறு.

அர்க்க உதயத்தல ரம்புயமாதல்
விற்குவளை யாத லிதழெட்டும் — நிற்குமதில்
ஊசிமுனை தெரித்தால் ஓரிதழிற் செல்காலம்
மாசில் கணமாய் வரும். (11)

என்றது ஆதித்தன் உதயகாலத்தில் அலரப்பட்ட தாமரைப் பூவாதல், செங்கழுநீர்ப் பூவாதல் எட்டிதழடுக்கி அந்த அடுக் கிலே ஊசியைத் தெரித்தால் ஓரிதழிலே தாக்குகின்ற காலம்

கணம்: கணமாவது ஆதித்தன் கிரணமென்றும், பஞ்சுத்தூளென்றும், நொய்மணலென்றும், மயிர்நுனியென்றும் சொல்லப்படும் என்றவாறு.

காட்டு கண மெட்டிலவம் காட்டை யிலவமெட்டுத்
தீட்டட்ட காட்டை சேர்நிமிடம் — நாட்டுபுவி
யேற்ற கிரியை யிதற்கெட்டா திமையவர்முன்
தோற்றிவரும் நான்கும் தொகுத்து (12)

என்பது, கணம் 8 கொண்டது – லவம்

லவம் 8 கொண்டது – காட்டை

காட்டை 8 கொண்டது – நிமிடம்

இந்த அருவம் [1] நான்கும் பூமியின் கண்ணுள்ளோர்க்குக் கிரியைகளினாலே காணப்படாது. ஆதலால் இந்திர சபையிலே காணப்படும் என்றவாறு

வாராய் நிமிடவகை யெட்டும் வந்தேறிச்
சோராது தோன்றித் துடியாகும் — பேரா
திரண்டு துடியா லெழுந் துரிதம் பின்னை
இரண்டு துரிதம் லகு (13)

கொத்தலகு விரண்டுங் கூறுங் குருவாகுங்
கொத்தலகு மூன்றுங் குளிர்புலிதங் — கொத்தவழி
மானே லகுநாலும் வண்காகு வாகுமெனப்
பானேர் மொழியாய் பகர் (14)

என்றது நிமிடம் 8 கொண்டது – துடி

துடி 2 கொண்டது – துரிதம்

துரிதம் 2 கொண்டது – லகு

லகு 2 கொண்டது – குரு

லகு 3 கொண்டது – புலுதம்

லகு 4 கொண்டது – காகபாதம், என்றவாறு.

---

1. அருவம் = (அரூபம்) உருவமில்லாதது.

## தாளத்தின் அங்கங்களாகிய கால அளவைகளின் மறுபெயர்கள்

இனி, கால் மாத்திரையின் பெயர்

விந்து விரதி விராமங் கிளர்புள்ளி
பந்தமனுக்குப் படரொத்து—முந்துதுடி
சொன்னார் கால்மாத்திரைக்குச் சொக்கனார் மிக்கதமிழ்
நன்னாவலர்முன் னயந்து. (15)

இனி, அரைமாத்திரையின் பெயர்

சுழிகொம்பு வட்டம் துரிதம் சுடிரங்கண்
விழிகண்டம் சக்கிரம் வியோமம்—மொழிதிங்கள்
வெஞ்சனமே விந்துதமே மிக்கவரை மாத்திரையென்
றஞ்சனவேற் கண்ணா யறி. (16)

இனி, ஒரு மாத்திரையின் பெயர்

வாளிசரங் கோல் மாத்திரிகங் கால்செவ்வை
நீளுமொரு அக்கரமே நேர்கீற்று—நாளுமகிழ்
மிக்க வியாபகமே மேவுமிரேகை யெனத்
தக்க லகுபேராகச் சாற்று. (17)

இனி, இரண்டு மாத்திரையின் பெயர்

வல்லதுவி மாத்திரிகம் வான்சிலையே வக்கிரமே
நல்லபிறை தீர்க்கம் நாடுசிலை—வில்லுக்
குடில மெனத்தானே குருத்தனக்குச் சொன்னார்
சடிலமுடிச் சொக்கனார் தாம். (18)

இனி, மூன்று மாத்திரையின் பெயர்

சீரிய கோமூத்திரியந் திரியங்கம் பன்னகமாம்
பாரிய சாயோற் பவமாகும்—பேரா
செய்ய திரிமாத்திரிகை தீர்க்க[1] முட னோங்காரந்
துய்ய புலிதப் பேராகச்சொல்.[2] (19)

இனி, நாலு மாத்திரையின் பெயர்

ஓசையிலா அன்னபத மொள் காகபாதமுட
னேசமிகும் புள்ளடியே நிச்சத்தம்—பேசாச்
சுவத்திகமே யென்றெண்ணிச் சேர் காகுவுக்குத்
தவத்தலைமைச் சொக்க ருரைத்தார். (20)

## 3. தாள அங்கங்களின் கால அளவு

இனி, அளவு

துன்று துடிகால் துரித மரையாகு
மொன்று லகுக்குருவே ஓரிரண்டு—நின்றுவௌர்
மூன்றுகுமே புலிதம் மொய்க்காகு நான்கெனவே
சான்றுகுஞ் சொக்க ருரைத்தார். (21)

---

1. தீர்க்கம்—சாமகானத்தில் மூன்று அக்ஷரகாலமுள்ள புலுதம் அடிக்கடி ப்ரயோகிக்கப்படுகிறது. அதற்கு 'தீர்க்கம்' என்றுபெயர். பொதுவாக 'தீர்க்கம்' என்பது நெட்டெழுத்தின் பெயர்.

2. அடையாறு மஹாமஹோபாத்யாய ஸ்ரீ உ. வே. சா. அவர்களின் ஞாபகார்த்தச் சுவடி நிலையத்திலுள்ள 874 ம் நெ. சுவடியில் அடியிற்கண்ட பாடல் அதிகபாடமாகக் காணப்படுகிறது.

பாந்தள்உயிர் உகாரஞ் சர்ப்போற்பவம் பணியாம்
சேர்ந்த புயங்கந் தயங்கமுடன்—வாய்ந்ததொரு
மின்னுர் நிவைபுலித மெனவீவை பெயரெனவே
சொன்னுர் புலவோர் தொகுத்து.

## 4. தாள அங்கங்களின் குறியீடுகள்

இனி, உருவம்

விராம வுருப்புள்ளி மெய்த்துரிதம் வட்டம்
இராம சரமிலகு ஏந்தும்—இராமன்கை
வில்லுக்குருப் புலிதம் மின்காகு வென்றுரைக்கில்
அல்லுக் கியல் புள்ளடி.[1] (22)

### அங்கங்களின் வர்ணம் (நிறம்)

பச்சை விராமம் பகர்வட்டம் நீலமெனு
முச்சரித்த கோல்வெள்ளை யுன்னுகுரு—நிச்சயமாஞ்
சிகப்புப் பொன்னே புலிதஞ் சேர்காகுப் போத்துநிறம்
வகுத்துச் சொன்னூர் முன்வகை.[2] (23)

---

1. விராமத்துக்குப் புள்ளியையும் ' ※ '
துரிதத்துக்கு வட்டத்தையும் ' o '
லகுவுக்கு சரத்தையும் ' | '
குருவுக்கு வில்லையும் ' S '
புலுதத்துக்கு மின்னையும் S̀
காகபாதத்துக்கு புள்ளடியையும் +

குறியீடுகளாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆயினும் ஏடுகளில்,

| | | | |
|---|---|---|---|
| கால் மாத்திரைக்கு | | அரைச் சந்திரனையும் | ◡ |
| அரை | ,, | முழுச் சந்திரனையும் | O |
| ஒரு | ,, | சரத்தையும் | \| |
| 2 | ,, | இந்த வடிவையும் | ㄣ |
| 3 | ,, | இந்த வடிவுகளையும் | ௨, 3 |
| 4 | ,, | இந்த வடிவையும் | + |

உபயோகிக்கிறூர்கள்.

2. இதற்குப்பின் அடையாறு 874 ம் நெ. சுவடியில் பிராமண க்ஷத்திரிய, வைசிய, சூத்திர முதலிய வர்ணபேதங்களும் அடியிற் கண்டபடி சொல்லப்பட்டிருக்கின்றன.

அந்தணனே துரிதம் அம்பே அரசனும்
வந்த விராமம் வைசியனும்—கந்தமருஞ்
சாபந்தனக் குரைக்கில் சந்திரனே யென்றென்றுங்
கோபவிழி மானனையாய் கூறு.
வெய்யோன் புலிதம் வியன்றதோர் காகபதம்
பையபலசாதி பலரே—மெய்யுற்று
நின்ற குலத்தில் நிறைந்த வடிவீதென்றூர்
மன்றகமழ் மாதே மதித்து.

## 5. அங்கங்களின் அதிதேவதைகள்

புந்தம் வருணன் படர்கொம்பு பஞ்சமுகன்
அந்தலகுச் சத்தி யடுத்தகுருச்—சந்திரனும்
அம்பிகையாம் [3]புலித மந்ததிரி மூர்த்தி
நம்புதிசை வான்காகு நாட்டு. (24)

(பொருள்) விராமத்துக்கு வருணனும், துரிதத்துக்குச் சிவனும், லகுவுக்குச் சத்தியும், குருவுக்குச் சந்திரனும், புலிதத் துக்குத் திரிமூர்த்திகளும், காகபாதத்துக்கு ஆகாசமுந் தெய்வங் களாகும்.

## 6. இனிக் குணம் - மாத்திரைகள் நிற்கும் நிலைகள்

வெய்ய விராமம் விளங்கத்தனியாது
துய்ய இனம் அல்லாற் றேன்றுதி—செய்ய
குருப்புலிதங் கூடாது கோல்துரிதந்தன்மே
லுருப்பெறு மென்றான் மதுரையோன். (25)

என்றது விராமம் நிற்கும் குணம்:— விராமம் தனித்து வராது. இனத்தோடல்லாமல் வராது. குருவின்மேல் புலிதத்து மேல் வராது. லகுவின் மேல் துரிதத்தின் மேல் நிற்கும் என்றவாறு.

முந்தத்தனியாது முன்னிடையில் மீளாது
சந்தக்குரு முன்பின் சாராது—செந்திருவே
பேணிவருந் தாளநிலை பின்னே சுழிகோல்பின்
காணவருங் காகபதங் காண். (26)

என்றது காகபாதம் நிற்குங்குணம். — காகபாதம் தனித்து நில்லாது. முன்னே வராது. நடுவிலும் வாராது. குருவின் முன்னும் பின்னும் நில்லாது. (புலிதத்தின் மேலும் வாராது). யாதொரு தாளத்தின் பிற்பகுதியில், லகுவின் பின்னுவது, துரிதத்தின் பின்னுவது வரும் என்றவாறு.

---

என்றது துரிதம் பிராமணன், லகு க்ஷத்திரியன், விராமம் வைசியன், குரு சூத்திரன, புலிதம் சூரியன் (சண்டன்), காகபதம் பலசாதி என்றவாறு.

3. அம்பிகை = தேவதை

வட்டங் கணை வில்லும் வண்புலிதம் வேறினமாம்
சட்டம் பெறவே தனித்தனியாம் — இட்ட
மனைத்துங் கலந்து வரலாமெனவுஞ் சொன்னர்
இனத்தொங்கற்கூடல் இறை [1]. (27)

என்றது துரிதம், லகு, குரு, புலிதம் இந்த நாலு அங்கங்களும் மூன்றிடத்திலும், இனமாகவும் தனித்தும், ஒன்றோடொன்று கலந்து தாளமுடிவளவும் ப்ரஸ்தாரவிதிக் [2] கும், வரும் என்றவாறு.

## 7. இனி ஒத்துக் கிரியை–அங்குலப் பிரமாணங்கள்

தாக்கு விரல் நான்காகும் தனித்துரிதம் தாழாது
நோக்கு விரல் எட்டாகும் நூற்செவ்வை — நீக்குகுரு
எட்டங்குலத்தால் இசைய எடுத்தொத்தி
எட்டங்குலத்தா லிறக்கு (28)

இருபத்து நாலங்குலத்தால் இசையச்
சுருவத்தா லொத்திச் சுழித்துப் — பருவத்தில்
விட்டால் புலிதமாம் மேவும் முப்பத்திரண்டு
தட்டாது கை நிச்சத்தம். (29)

இடம் வலம் மேல்கீழிசையக் கைகாட்டக்
கடவது காகபதங்காண் — அடவுரைத்தார்
பூலோகம் சென்னியின்மேற் பூரித்துப் போற்றுமை [யாள்
ஆலோலங் கொண்ட சொக்கராய்ந்து. (30)

இம்மூன்று வெண்பாக்களின் பொருள் :— துரிதத்துக்கு நாலு அங்குலம் எடுத்தொத்தவும். லகுவுக்கு 8 அங்குலம் எடுத்தொத்தவும். குருவுக்கு 8 அங்குலம் ஒத்தி 8 அங்குலம் இறக்கவும். புலிதத்துக்கு 8 அங்குலம் ஒத்தி, 8 அங்குலம்

---

1. இனத்தொங்கற் கூடல் இறை = சூடும் தோளுக்கு இனமாகிய மாலையை யணிந்த மதுரைக்கிறையாகிய பரமேச்வரன்.

2. பிரஸ்தாரவிதி = தாளத்தின் மொத்த கால அளவை மாற்றுமல் அங்கங்களைப் பலவகையாக அமைக்கும் முறை,

சுழித்து, 8 அங்குலம் இறக்கவும். காகபாதத்துக்கு இடம், வலம் மேல், கீழ், இந்த நாலு திசையும் முப்பத்திரண்டங்குலப் பிரமாணம் கைகாட்டவும் என்றவாறு.

## பிறப்பு (மாத்திரை பிறந்த வகை)

பத்மாசனத்திருக்கும் பாவையிடைப்பங்குதுடி
சற்பாபரண மணி சங்கரனார் — மெய்ப்பான
கொன்றைச் சடைமுடியார் கொண்டகபாலத்தில்
ஒன்றிச் சுழி பிறந்ததுற்று. (31)

வாசுகி தன்னிடத்தில் வாளி பிறந்ததற்பின்
வீசுமதியிடத்தில் விற்பிறந்து — தேசுத்
திரிசூலந் தன்னிற் றிகழும் புலிதம்
எறிசூலம் காகபதமே. (32)

இந்த இரண்டு வெண்பாக்களின் பொருள்:— பத்மாசனத்திலிருக்கும் பராசக்தியினுடைய இடையிலே துடி பிறந்தது; பரமேச்வரன் கையிலிருக்கும் கபாலத்தில் துரிதம் பிறந்தது; வாசுகியான பாம்பினிடத்தில் லகு பிறந்தது. மதியினிடத்தில் குரு பிறந்தது; பரமேச்வரன் கையிலிருக்குஞ் சூலத்தில் புலிதம் பிறந்தது; பரமேச்வரன் எறியுஞ் சூலத்தில் காகபாதம் பிறந்தது என்றவாறு.

சூட்டுபிறை காலாம் சொல் நேத்திர மரையாம்
கூட்டுபர மன்பறையே கூறிரண்டாம் — தோட்டுப்
புயங்கமே மூன்றாய்ப்புகழ்வேதம் நாலாய்த்
தியங்கு மீசானரிடத்தே[1] (33)

என்றது சடையிலே தரிக்கப்பட்டிருக்கும் பிறை துடியாகவும், இரண்டு நேத்திரமும் துரிதமாகவும், பரமேச்வரன் ஒன்றாய் நின்றது லகுவாகவும், பரமேச்வரன் அர்த்தநாரீசுவரராய் நின்றது குருவாகவும், பரமேச்வரன் கழுத்திலே தரித்தபாம்பு புலிதமாகவும், நான்கு வேதமும் காகபாதமாகவும் நின்றது.

1. இச் செய்யுளும் இதன் உரையும் R. 518 நெ. O. M. L. சுவடியில் மட்டும் காணப்படுகிறது.

## 8. அஷ்டகண லக்ஷணம்

பகணமே யாதிகுருப் பால்மதியந் தெய்வம்
புகழ்பலனும் நல்ல புகழாம் — மகணம்
நிலையாகு மூன்றுகுரு நீணிலமே தெய்வந்
தொலையாத செல்வமெனச் சொல். (34)

ஆதிலகு யகணம் ஆனபுனலே கடவுள்
ஏதமறத் தழைத்தலே பலமாம் — போத
முழுதும் லகு நகணம் மோய்சுவர்க்கந் தெய்வம்
பழுதறும் ஆயுற்பலம். (35)

சேரு நடுக்குருவே செப்புஞ் செகணமொழி
கூறிரவி தெய்வம் கொடும் பிணியாங் — காரிகையாய்
ஈற்றுக் குருச்சகண மென்னுங்கடவுளது
காற்றுப் பரதேசங்காண். (36)

நடுவிலகு வந்தால் நயக்கும் ரகணம்
கடவுளனல் சாவுபலன்காட்டும் — முடிவிலகு
வெண்ணுந் தகணம் எழிலாம் பரங்கடவுள்
பண்ணுமிடியே பலம் [1]. (37)

---

1. R 518 ல் கணங்களை 'ப்ரஸ்தாரம்' என்ற மார்க்கப்படி எட்டுக் கணங்களையும் ஒன்றன் பின் ஒன்ருக அமைக்கும் வழி அடியிற் கண்ட பாடலில் கூறப்பட்டிருக்கிறது :—

கணமேருவின் சூத்திரம் —

மூன்றுகுடிலெழுதி முற்குடிலைக் குறைத்துத்
தோன்றவலத் துள்ளபடி யேதொகுத்து — மூன்ருய்
முயலவரை கால்குருவும் மூன்றுலகுக்கண்டால்
மயரசத செபநமாம்.

இதன் பொருள் :— மகணம், யகணம், ரகணம், சகணம், தகணம், செகணம், பகணம், நகணம் இவைகளின் வடிவை வரிசையாக அமைப்பதற்கு மும்மூன்று அங்கங்களாக குரு லகுக்களை அடியிற் கண்டபடி அமைக்கவும் :—

1. முதலில் மூன்று குரு (குடில் = வளைவு, அதாவது குரு) எழுதிக் கொள்ளவும்.

இந்த நான்கு வெண்பாக்களின் பொருள் :—

குரு லகுக்களான மூன்று அங்கங்கள் கொண்டது **'கணம்'** எனப்படும்.

---

2. பிறகு முதல் குருவின் கீழ் லகுவைப் போடவும். வலப் பக்கத்தில் மேலேயுள்ளபடி எழுதவும்.

3. இப்போது மூன்று அங்கங்களுக்குக் குறைந்தால் காலியான இடத்தில் குருவையே போட்டுக்கொள்ளவும்.

அப்போது அடியிற்கண்டபடி ப்ரஸ்தாரங்கள் அமையும் :—

| | | | | |
|---|---|---|---|---|
| 2 | 2 | 2 | — | மகணம் |
| 1 | 2 | 2 | — | யகணம் |
| 2 | 1 | 2 | — | ரகணம் |
| 1 | 1 | 2 | — | ஸகணம் |
| 2 | 2 | 1 | — | தகணம் |
| 1 | 2 | 1 | — | ஜகணம் |
| 2 | 1 | 1 | — | பகணம் |
| 1 | 1 | 1 | — | நகணம் |

அதே சுவடியில் கணங்களிலுள்ள குரு லகுக்களை ஊர்ப் பெயர்களாக அமைத்து ஓர் வாய்ப்பாடு அடியிற்கண்ட செய்யுளில் கொடுக்கப்பட்டிருக்கிறது ;—

துய்ய வாமந்தூர் புகாரூர் தென்சூரியூர்
மயிலைக்குவேறன் வயலூர் — செய்யவயல்
மாகாழியாகு விராலி பூவணம் மதுரை
மயரசத செபநமாம்.

இதன் பொருள் :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வா — மந் — தூர் | = | 2 2 2 | = | மகணம் |
| பு — கா — ரூர் | = | 1 2 2 | = | யகணம் |
| சூ — ரி — யூர் | = | 2 1 2 | = | ரகணம் |
| ம — யி — லை | = | 1 1 2 | = | ஸகணம் |
| மா — கா — ழி | = | 2 2 1 | = | தகணம் |
| வி — ரா — லி | = | 1 2 1 | = | ஜகணம் |
| பூ — வ — ணம் | = | 2 1 1 | = | பகணம் |
| ம — து — ர | = | 1 1 1 | = | நகணம் |

ஆதி குரு பகணம் — தேவதை சந்திரன் — பலன் கீர்த்தி
மூன்றுகுரு மகணம் — தேவதை பூமி — பலன் செல்வம்
ஆதிலகு யகணம் — தேவதை புனல் — பலன் தழைத்தல்
மூன்றுலகு நகணம் — தேவதை சொர்க்கம் — பலன் ஆயுள்

**— இவை நான்கும் அமிர்தகணம்.**

நடுக்குருசெகணம் — தேவதை சூரியன் — பலன் வியாதி
ஈற்றுகுருஸகணம் — தேவதை காற்று — பலன் பரதேசம் செல்லுதல்
நடுலகு ரகணம் — தேவதை அக்னி — பலன் சாவு
ஈற்றுலகுதகணம் — தேவதை ஆகாயம் — பலன் வறுமை

**— இவை நான்கும் விஷகணம்.**

**இனி கணத்துக்கு நக்ஷத்திரம் வருமாறு :—**

கோதிலா மூன்றுகுரு மகணம் பூதலநாள்
தீதிலாக் கேட்டை குருவெய்தும் — ஆதிலகுத்
தானே யகணஞ் சதையஞ் சலமகிழ்ச்சி
மானே பலமாகு மற்று. (39)

மற்று நடுநேர் தீ வருரகணங் கார்த்திகைநாள்
உற்றபலன் சாவாகு மொன்றுதலாய்ப் — பெற்றகுரு
வந்தமுதல் வாயுவாஞ் சகணஞ் சோதிநாள்
புந்திதலம் பிழையாய்ப் போம் (40)

போற்றரிய மூன்றுலகு நகணம் பொன்னுலகத்
தோற்றும் பரணி நன்மை தோற்றுவிக்கும் — ஏற்ற [மிகு
மாதிகுருப் பகணம் அம்புலி மீன் புகழே
சோதிபெற வந்து தொகும். (41)

தொக்க நடுக்குருவிற் சூரியன் பூசஞ் சகணம்
மிக்கபலன் நோயாகு மெல்லியலாய் — அக்கண்
இறுதிநேர் வாய்த்தகண மைம்பூதம் பாற்குற்
குறுகுபலன் சூனியமாகும். (42)

இவைகளின் பொருள் :—

| கணம் | நட்சத்திரம் |
|---|---|
| மகணம் | கேட்டை |
| யகணம் | சதயம் |
| ரகணம் | கார்த்திகை |
| ஸகணம் | சுவாதி |
| நகணம் | பரணி |
| பகணம் | ரோகிணி |
| ஜகணம் | பூசம் |
| தகணம் | பூரம் |

(இப்பாடல்களிலுள்ள தேவதை முதலிய மற்ற விவரங்கள் முன் பாடல்களின் உரையில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.)

முன்னமொழியெண் கணமும் மூன்றுறுப்பால் ஒவ்
[வொன்றும்
மன்னு லகுக்குருவே வைப்பாகும் — இந்நிலத்தில்
வல்ல பலதாளத்து வாத்திய கீதப்பிரபந்தஞ்
சொல்லுமுதலாற் கணமே சூட்டு (43)

(இதன்பொருள் :— முன்சொல்லப்பட்ட 8 கணங்களில் அமிர்த கணங்களாகிய பகணம், மகணம், யகணம், நகணம் இவைகளை முதலில் ப்ரயோகித்து அமைக்கப்பட்ட தாளத்தில் சொற் கட்டுக்களும், சாஹித்யங்களும் வாத்தியகீத ப்பிரபந்தங்களும், சங்கீதக்கலைவாணர்களுக்கும், நாட்டியக்கலைஞர்களுக்கும் நல்ல பலனைத் தரும். பின்னே சொல்லப்பட்ட விஷகணங்களாகிய ஜகணம், ஸகணம், ரகணம், தகணம் இவைகளை முதலிலோ அல்லது அதிகமாகவோ ப்ரயோகித்தால் தீயபலனைத் தரும் என்பதாம்.)

## 9. இனித் தாளங்களின் சாதி

நீண்டு சதுரச்சிரந் திரியச்சிரமே
காண்டகு மிச்சிரமே கண்டமென — நீண்டவைகள்
தானந்தணன் முதலாய் சாதிவிதம் நான்கென்றுர்
ஆனந்தயோக சொக்கராய்ந்து (44)

என்பது சதுரச்சிரம், திரியச்சிரம், மிச்சிரம், கண்டம் என்கின்ற நாலு தாளஜாதிக்கும் பிரமாணன் முதலாகிய நாலு ஜாதிகளுமாம் என்றவாறு.

நாட்டுசதுரச்சிரமே நாற்கூறுசெய்தலால்
மூட்டுதிரியச்சிரமே முக்கூறும் — கூட்டிலிவை
முக்கூறும் நாற்கூறும் முற்றுவது மிச்சிரமே
யெக்கூறு மின்மை கண்ட மென் (45)

சாதிலக்ஷணம் வருமாறு:—

அதாவது யாதொரு தாளம் நாலு கூறு செய்வதற்குப் பொருந்தினதோ அது சதுரச்சிரமான பிராம்மணன்.

முக்கூறு செய்வதற்குப் பொருந்தினது திரியச்சிரமான க்ஷத்திரியன்.

நாற்கூறும் முக்கூறுஞ் செய்வதற்குப் பொருந்தினது மிச்சிரமாகிய வைசியன்.

இக்கூறு செய்வதற்குப் பொருந்தாத தாளம் கண்டமாகிய சூத்திரனும் என்றவாறு.

## 10. சதுர்மேருப்பிறப்பு, சண்மேருப்பிறப்பு (பலவகை அங்கங்களால் தாளங்களைப் பிறப்பிக்கும் ப்ரஸ்தாரமுறை)

### சதுர்மேருப்பிறப்பு

கோலாதியின் கீழ்க்குறைந்த வுருக்கொண்டுவலம்
மேலாயுருக்காட்டி வேண்டுவன — நூலாற்
பெறுந்தனையும் வாமம் பெரியதுமுன்னிட்டு
வெறுந்துரிதம் வந்தால் விடு. (46)

இதன் பொருள்:— இந்த சதுர்மேருப் பிறப்பாகிய துரிதாதி ப்ரஸ்தாரத்தின் வரலாறு சொல்லப்படுகிறது. அதாவது துரிதம் லகு, குரு, ப்லுதம் இந்நான்கு அங்கங்களைக் கொண்டும் பல வகையாகத் தாளங்களை வரிசையாய் அமைக்கும்முறை[1].

---

1. இச்செய்யுளில் கண்ட சதுர்மேரு ப்ரஸ்தாரம், இதற்கடுத்த செய்யுளில்கண்ட ஷண்மேரு ப்ரஸ்தாரம், இவற்றின் விபரம், 52வது செய்யுளின்கீழ் உள்ள அடிக்குறிப்பில் விவரிக்கப்பட்டிருக்கிறது. அங்கு கண்டுகொள்க.

### சண்மேருப்ரஸ்தாரம்

மற்றுமிக சண்மேரு வைத்தபிறப்பதனைச்
சற்றுவெளிகாணக் சாற்றுவேன் — பற்றடைவு
முன்னைச் சதுர்முறைமை யால்மொய்த்திறங்கிப்
பின்னைப் பிறந்ததொடும் பேசு (47)

தோர்மேவுகின்ற ப்ரஸ்தார சங்கை சொற்செய்நஷ்டம்
பார்மேவு முத்திஷ்டம் பாதாளத்தொடு பகர்துரித
மார்மேவு துய்யலகுமேரு வண்குருமேரு வண்
தார்மேவு புலிதம்சொல்மேரு சையோகமுஞ்
[சாற்றுவமே (48)

சாற்றிய கண்டப்ரஸ்தாரம் சொற்சதுர்மேருவுக்குத்
தோற்றிய நஷ்ட வுத்திஷ்டங்கள் கூட்டித்தொகுத்த
[தொகை
ஏற்றியபத்தொன்பதென்றே இசைத்தனர்இப்புவிக்கு
நாற்றிசைபோற்றும் பரத நன்னூல் நாவலரே (49)

என்பது: 1. ப்ரஸ்தாரம் 2. சங்கை (சங்கியை) 3. நஷ்டம் 4. உத்திஷ்டம் 5. பாதாளம், 6. துரிதமேரு, 7. லகுமேரு, 8. குருமேரு, 9. புலுதமேரு, 10. சையோகமேரு, 11. கண்டப்ரஸ்தாரம், 12-15. நாலுமேருவுக்கு நாலு நஷ்டம், 16-19. நாலுமேருவுக்கும் நாலு உத்திஷ்டம் இவை தாளப்ரஸ்தாரத்தின் பகுதிகளாம்[1].

[2]நாவலர்சொற்படியே ப்ரஸ்தாரம் நடத்தும்வகை
பூவுலகத்திற் றுரிதம் லகுக் குருபோற் புலிதம்
மூவடிவு தத்தங்கீழ் சுழிகோல்வில்லு மொய்த்திறங்கி
மேவுதுரிதத்தின்கீழ்ப் பிறவாது விளம்பினரே (50)

---

1. இவற்றின் விபரத்தை இதன் பின்வரும் அடிக் குறிப்புகளிற் காண்க.

2. இந்தப்பகுதி சென்னை கீழ்த்திசைச்சுவடி நிலைய R.518 நெ சுவடியிலிருந்து எடுத்தெழுதப்படுகின்றது.

விளம்பிய மூத்தவுருக்கடை வாமம் விதிக்கடையில்
இளங்கணையாகுதல் வில்லாகுதல் முன்னே நின்ற
களங்கமில்லாத வுருக்கட்குன்ற வலங்கண்டவுரு
தளங்கொளத் திட்டிடத்தே சேவை மூத்ததைத்தாபித்
[திடே (51)

தாபித்துமூத்ததை மிகவதற் கிடந்தான்வரைந்து
பாவித்தங்கிந்த முறைப்படியே ப்ரஸ்தாரம்பண்ணி
தேவுத்தவங்கு நீளங்குறைவறச் செய்திடவே
மேவித்துரிதம் நிறைகண்டபோதுவிடச்செய்யுமே(52)

(இதன் பொருள்) வேணுமென்ற மாத்திரைக்கு ப்ரஸ்தாரம் எழுதிக்கொண்டு புலிதத்தின் கீழே குருவும், குருவின் கீழே லகுவும், லகுவின் கீழே துரிதமும், துரிதத்தின் கீழே ஒன்றும் பிறவாதென்கிறசங்கியையுங்கண்டுகொண்டு ப்ரஸ்தாரத்தின்கீழே வாம (இடது) பாகத்திருந்த மூத்தவுருவைக் குறைத்துக் கொண்டு, தக்ஷிண (வலது) பாகத்திலிருந்தபடி எழுதிக் கொண்டு மாத்திரைக்குறைச்சல் வாமபாகத்தில் எழுதவும். சர்வ துரிதங்காணுமளவும் இந்தப்படி எழுதவும். என்றவாறு[3].

---

3. சதுர்மேரு ப்ரஸ்தாரம் செய்யும் விதம்:—

முதலில் தாளத்தின் மொத்தக்கால அளவைக் கூடியவரையில் பெரிய அங்கங்களாகவே அமைத்து வலது புறத்தில் பெரிய அங்கங்களும் இடது பக்கத்தில் வரவரச் சிறிய அங்கங்களுமாக இருக்கும்படி எழுதிக்கொள்ளவும். இது முதல் ப்ரஸ்தாரம்.

இரண்டாவது ப்ரஸ்தாரம் எழுதும் முறை பின்வருமாறு:—முதல் ப்ரஸ்தாரத்தின் இடது கோடியிலிருந்து முதலில் காணப்படும் லகு, குரு, அல்லது புலிதத்தின் கீழ், முறையே, துரிதம், லகு, குருவை எழுதிக்கொள்ளவும். அதாவது முதலில் துரிதம் காணப்பட்டால் அதை விட்டுவிட்டு அதற்கடுத்த அங்கத்தைக் கவனித்து அது லகு வானால் அதன் கீழ் துரிதத்தை எழுதவும். அது குருவானால் அதன் கீழ் லகுவை எழுதவும். புலிதமானால் அதன் கீழ் குருவை எழுதவும். இதற்கு வலது பக்கத்தில் மேலே உள்ள அங்கங்களையே எழுதிக் கொள்ளவும். இப்போது கிடைத்திருக்கும் அங்கங்களைக் கூட்டிப் பார்த்துத் தாளத்தின் மொத்தக் கால அளவைக்குக் குறையும் காலத்

தைக் கூடியவரையில் பெரிய அங்கங்களாக இடது புறத்தில் எழுதிக் கொள்ளவும். அப்படி எழுதும்போது இடதுபுறம் போகப்போகச் சிறிய அங்கங்களாக இருக்கும்படி எழுதவும். இது இரண்டாவது ப்ரஸ்தாரம்.

இப்படியே மற்ற ப்ரஸ்தாரங்களையும் அமைத்துக்கொண்டு போய்க் கடைசியில் எல்லா அங்கங்களும் துரிதமாகக் கிடைத்ததும் ப்ரஸ்தாரத்தை நிறுத்திக்கொள்ளவும்.

உதாரணமாக இதனடியில் ப்ரஸ்தாரவரிசைகள் எழுதப்பட்டிருக்கின்றன. **ஒவ்வொரு ப்ரஸ்தாரத்திலும் முதலில் எழுதப்படும் அங்கம் அடிக்கோடிட்டுக் காட்டப்பட்டிருக்கிறது :—**

| | | |
|---|---|---|
| 1. ஒரு துரிதத்துக்கு | $\underline{0}$ | என்ற ஒரே ப்ரஸ்தாரம். |
| | | ஆக மொத்தம் ப்ரஸ்தாரம் 1 |
| 2. ஒரு லகுவுக்கு | $\underline{1}$ | என்பது முதல் ப்ரஸ்தாரம் |
| | 0$\underline{0}$ | ,, 2வது ,, |
| | | ஆகமொத்தம் ப்ரஸ்தாரம் 2 |
| 3. ஒரு துரிதம் ஒரு லகு கொண்டதற்கு | 0$\underline{1}$ | என்பது முதல் ப்ரஸ்தாரம் |
| | 1$\underline{0}$ | ,, 2வது ,, |
| | 0$\underline{0}$0 | ,, 3வது ,, |
| | | ஆகமொத்தம் ப்ரஸ்தாரம் 3 |
| 4. ஒரு குருவுக்கு | $\underline{S}$ | என்பது முதல் ப்ரஸ்தாரம் |
| | 1$\underline{1}$ | ,, 2வது ,, |
| | 0$\underline{0}$1 | ,, 3வது ,, |
| | 01$\underline{0}$ | ,, 4வது ,, |
| | 1$\underline{0}$0 | ,, 5வது ,, |
| | 0$\underline{0}$00 | ,, 6வது ,, |
| | | ஆகமொத்தம் ப்ரஸ்தாரம் 6 |
| 5. ஒரு துரிதம் ஒரு குரு சேர்ந்ததற்கு | 0$\underline{S}$ | என்பது முதல் பிரஸ்தாரம் |
| | 01$\underline{1}$ | ,, 2வது ,, |
| | 1$\underline{0}$1 | ,, 3வது ,, |
| | 0$\underline{0}$01 | ,, 4வது ,, |
| | S$\underline{0}$ | ,, 5வது ,, |
| | 1$\underline{1}$0 | ,, 6வது ,, |
| | 0$\underline{0}$10 | ,, 7வது ,, |
| | 01$\underline{0}$0 | ,, 8வது ,, |
| | 1$\underline{0}$00 | ,, 9வது ,, |
| | 0$\underline{0}$000 | ,, 10வது ,, |
| | | ஆகமொத்தம் ப்ரஸ்தாரம் 10 |

| | | | | |
|---|---|---|---|---|
| 6. ஒரு புலிதத்துக்கு | S' | என்பது | முதல் | ப்ரஸ்தாரம் |
| | 1S | ,, | 2வது | ,, |
| | 00S | ,, | 3வது | ,, |
| | S1 | ,, | 4வது | ,, |
| | 111 | ,, | 5வது | ,, |
| | 0011 | ,, | 6வது | ,, |
| | 0101 | ,, | 7வது | ,, |
| | 1001 | ,, | 8வது | ,, |
| | 00001 | ,, | 9வது | ,, |
| | 0S0 | ,, | 10வது | ,, |
| | 0110 | ,, | 11வது | ,, |
| | 1010 | ,, | 12வது | ,, |
| | 00010 | ,, | 13வது | ,, |
| | S00 | ,, | 14வது | ,, |
| | 1100 | ,, | 15வது | ,, |
| | 00100 | ,, | 16வது | ,, |
| | 01000 | ,, | 17வது | ,, |
| | 10000 | ,, | 18வது | ,, |
| | 000000 | ,, | 19வது | ,, |

ஆகமொத்தம் ப்ரஸ்தாரம் 19

**ஷண்மேரு ப்ரஸ்தாரம் :—** சதுர்மேரு ப்ரஸ்தாரம் செய்யும் வழியைப் பின்பற்றி மேலே காகபாதத்தையும், கீழே அனுத்ருதத்தையும் சேர்த்து 6 அங்கங்களைக்கொண்டு ப்ரஸ்தாரம் செய்வது ஷண்மேரு ப்ரஸ்தாரம்.

## சங்கியைக்கு லக்ஷணம்

செய்தேயெழுதி முடிந்திடு லக்கந்திகழந்தியம்
பெய்தேயிடத் திலகுவதுபாந்தியம் பேரந்தியத்
துய்தானநாலாவது துரியமென்று சொல்லுமினி
மைதீருமந்தியத் தாறுவது சட்கமன்னிவிடே (53)

எழுதிமுடிந்தலக்கம் அந்தியம். அந்த அந்தியத்திற்கு அடுத்தது உபாந்தியம். அந்தியத்திற்கு நாலாவது துரியம். அந்தியத்திற்கு ஆறுவது ஷட்கம்; இந்தப்படி அந்திய, உபாந்திய, துரிய, ஷட்கங்களை அறியவும் என்றவாறு.

வீடுமரை மாத்திரையே முதல்வேண்டிய மாத்திரைக்குக்
கடவதுசங்கை பகர்கின்றபோததைக் காணும்வகை
தொடுமரைக்கொன்றந்த வொன்றுவதந்தியந் தோன்றியகை
எடுதுணைக்குபாந்திய பாவம்பிரதம மேத்திக்கொண்டே (54)

கொண்டுவந்தொன்றுக் கிரண்டாகவே வரைகோழிலது
கண்டுவந்தந்தியவுபாந்திய மேத்திக்கொண் டொன்றரைக்குத்
தண்டுணைமூன்றிடே யளவந்தியவுபாந்தியந் தன்னுடனே
பண்டுடன்சொற் றுரியபாவம் திரிதீயம்பார்த்தெடுத்தே (55)

எடுத்துவந்தொன்றுக் காறெழுதந்திய வுபாந்தியமுந்
தொடுத்ததுரியமுடனிரண்டரைக்குத் துலங்குபத்தாய்
நடத்தந்தியவுபாந்திய துரிய நற்பஞ்சமத்தோ
டடுத்தது மூன்றுக்குப்பத்தொன்ப தென்னவறிந்து
[கொள்ளே (56)

அறிந்துகொ ளந்தியவுபாந்திய துரியம தானசட்கஞ்
செறிந்திடுலக்க முப்பான்மூன்று முப்பத்துமூன்றுசெவ்வே
பெறுந்தொகை மூன்றரைக்கீழ் வரையென்றுமுன்பேசினர்பா
வுறுப்பரதாகம நூல்வழிகண்டிடு முத்தமரே (57)

உத்தமமிப்படி அந்தியமும் பின்னுமுபாந்தியமும்
ஒத்ததுரியமுஞ் சட்கமுங்கூட்டி ஒருதொகையாய்
எத்தனைமாத்திரைக்காகிலும் கண்டுகொளெட்டினுக்குள்
அத்திஆறுயிரத்திருநூற்று முப்பதுமாறதுண்டே (58)

என்றது, அந்திய, உபாந்திய, துரிய, சட்கம் பிறக்குமள வும் அவற்றையும், துரியசட்கம் பிறக்காதவிடத்தில் திருதீயம், பஞ்சமங்கூட்டியும் எழுதவும், என்றவாறு.

ஆறணியுஞ் சடையார்சொன்ன சங்கையிலானபலன்
பேறணியந்தியமே துரிதாதிபெறுமிடத்தில்
மாறிடுபாந்தியங் கோலாதியாகவருந்துரியந்
தாரணியுந்தனுவாதி சட்கம் புலிதாதியுண்டே[4] (59)

4. அடுத்த பக்கம் பார்க்க.

என்றது அந்தியமெல்லாம் துரிதாதியாகவும், உபாந்திய மெல்லாம் லகுவாதியாகவும், துரியமெல்லாம் குருவாதியாக வும். சட்கமெல்லாம் புலிதாதியாகவும் வரும், என்றவாறு.

---

4. சங்கியை என்பது குறிப்பிட்ட கால அளவையுள்ள தாளத்துக்கு மொத்தம் எவ்வளவு ப்ரஸ்தாரம் கிடைக்கும் என்று சொல்லும் எண் வரிசை. சதுர்மேரு ப்ரஸ்தாரத்தில்

ஒரு துரிதகாலம் உள்ள தாளத்திற்கு ப்ரஸ்தாரம் 1.
2 ,, ,, ,, 2

இனி 3, 4, 5, 6, 7, 8 முதலிய துரித காலமுள்ள தாளங்களுக்கு மொத்த ப்ரஸ்தாரம் கண்டு பிடிக்கும் எண் வரிசை எழுதும் வழி வருமாறு :—

அந்தியம் (கடைசியாகக் கிடைத்த எண்), உபாந்தியம் (அதற்கு முந்திய எண்), துரியம் (நான்காவது எண்), சட்கம் (6-வது எண்) இவைகளைக் கூட்டி எழுதினால் வரிசையில் அடுத்த எண் கிடைக்கும். துரியம் இல்லாத இடத்தில் த்ருதீயத்தை (3-வது எண்ணை)யும், சட்கம் இல்லாத இடத்தில் பஞ்சமத்தை (5-வது எண்ணை) யும் கூட்டிக் கொள்ளவும். இவ்விதம் எழுதினால்,

3 துரிதத்துக்கு — அந்தியமாகிய — 2
உபாந்தியமாகிய — 1
ஆக — 3 ; 1, 2, 3 என்பது வரிசை

4 துரிதத்துக்கு — அந்தியமாகிய — 3
உபாந்தியமாகிய — 2
(துரியம் இல்லாமையால்) த்ருதீயமாகிய — 1
ஆக — 6 ; 1, 2, 3, 6 என்பது வரிசை

5 துரிதத்துக்கு — அந்தியமாகிய — 6
உபாந்தியமாகிய — 3
துரியமாகிய — 1
ஆக — 10 ; 1, 2, 3, 6, 10 என்பது வரிசை.

6 துரிதத்துக்கு — அந்தியமாகிய — 10
உபாந்தியமாகிய — 6
துரியமாகிய — 2
(சட்கம் இல்லாமையால்) பஞ்சமமாகிய — 1
ஆக — 19 ; 1, 2, 3, 6, 10, 19 என்பது வரிசை

| | | |
|---|---|---|
| 7 துரிதத்துக்கு | — அந்தியமாகிய | — 19 |
| | உபாந்தியமாகிய | — 10 |
| | துரியமாகிய | — 3 |
| | சட்கம் | — 1 |
| | ஆக | — 33 ; 1, 2, 3, 6, 10, 19, 33 என்பது வரிசை |

| | | |
|---|---|---|
| 8 துரிதத்துக்கு | — அந்தியமாகிய | — 33 |
| | உபாந்தியமாகிய | — 19 |
| | துரியமாகிய | — 6 |
| | சட்கம் | — 2 |
| | ஆக | — 60 ; 1, 2, 3, 6, 10, 19, 33, 60 என்பது வரிசை |

இந்த சங்கியை வரிசையைக்கொண்டு ஒரு தாளத்திற்கு மொத்த ப்ரஸ்தாரங்களின் தொகையைக் கண்டுபிடிப்பதல்லாமல், அந்த ப்ரஸ்தாரங்களில் துரிதத்தில் முடியும் ப்ரஸ்தாரங்கள் எத்தனை, லகுவில் முடிவது எத்தனை, குருவில் முடிவது எத்தனை, புலுதத்தில் முடிவது எத்தனை என்பதையும் கண்டுகொள்ளலாம். எந்த நான்கு எண்களைக் கூட்டிக்கொண்டோமோ அவைகளே இதை உணர்த்தும்:

| | | | | |
|---|---|---|---|---|
| அந்தியம் | — | துரிதத்தில் முடிவதையும் | | |
| உபாந்தியம் | — | லகுவில் | ,, | |
| துரியம் | — | குருவில் | ,, | |
| சட்கம் | — | புலுதத்தில் | ,, | குறிக்கும் |

உதாரணம் :—

| | | | |
|---|---|---|---|
| 6 துரிதகாலமுள்ள தாளத்தில் துரிதத்தில் முடியும் ப்ரஸ்தாரங்கள் | | | — 10 |
| லகுவில் | ,, | ,, | — 6 |
| குருவில் | ,, | ,, | — 2 |
| புலுதத்தில் | ,, | ,, | — 1 |

எனக்கண்டுகொள்ளலாம்

## நஷ்டம்

உண்டெனு நஷ்ட மதேதெனி லுற்றவுருவெடுத்துப்
பண்டுளம்வைத் தின்னபேதக மெப்படிப்பாரென்பது
கண்டபின் கெட்ட இலக்கங் கழித்திட்டுக்கண்டலக்கம்
கொண்டந்தியங் கொண்டிலதார் சுழியென்றுகூறுவரே

(60)

கூறந்தியங் கோழிக்கோலவருஞ் சேஷையொன்றே [கொடுத்து
மாறுவது மந்தியவுபாந்தியங் காணில் வருகுருவே
மீறுமிதற்கினி ரண்டரை சேஷம்விடுதுகைக்குள்
ளேறந்தியத்தோ டுபாந்தியதுரிய மெடுக்கில்பின்னே (61)

பின்னெட்டிற்கிரண்டே யரைசேஷம் விடுமிலக்கஞ்
சொன்னே னில்லாவிடில் மாத்திரைமுத்துந் துரிதமிடும்
பின்னேயு மாத்திரையாவும் பிறந்துலக்கம் பிழைத்தால்
முன்னே சரிவரக்கண்டுகொள் நஷ்டமுறையிதுவே[5] (62)

கெட்டலக்கத்தைத்தள்ளி மீந்த லக்கத்தை யெடுத்துக் கொண்டு அந்திய, உபாந்திய, துரியமெடுத்தால் புலிதம் பிறக்கும் அதுக்கிரண்டரை சேஷந்தள்ளவும். அந்திய, உபாந்தியம் எடுத்தால் குருபிறக்கும்.

---

5. நஷ்டம் :-மேலே சொன்னபடி தாளத்தின் ப்ரஸ்தார வரிசையில் இத்தனையாவது ப்ரஸ்தாரம் என்ன என்று கேட்கும் கேள்விக்கு 'நஷ்ட ப்ரச்னே' என்று பெயர். அதாவது தவறிப்போனதைப்பற்றிய கேள்வி என்று பொருள். இதற்கு விடையளிக்கும் வகையைப்பற்றி மேலேயுள்ள செய்யுள்களிலோ உரையிலோ கண்டவிவரம் தெளிவாக விளங்கவில்லை. எனினும் இதிலுள்ள வழி ஸங்கீதரத்னகரத்திலுள்ள மார்க்கத்தைப் பின்பற்றியிருப்பதாகத் தெரிகிறபடியால் அதிலுள்ள முறையை இங்கு தருகிறோம் :— அந்தத்தாளத்திற்குரிய ப்ரஸ்தாரத் தொகை வரையில் சங்கியை வரிசையை எழுதிக்கொள்ளவும். கேள்வியில் கொடுக்கப்பட்டிருக்கும் வரிசை எண்ணை மொத்த ப்ரஸ்தாரத் தொகையிலிருந்து கழிக்கவும். கழித்து வந்த மீதியிலிருந்து அந்தியத்தையும், அது கழிபட்டால் உபாந்தியத்தையும் இப்படியே வரிசையாகக் கழித்துக்கொண்டு வரவும். அப்போது எந்த எண்ணுவது கழிபடாமற் போனால் ப்ரஸ்தாரத்திலுள்ள ஒரு துரிதம் கிடைக்கும். கழிபடும் எண்ணைக்கொண்டு ஒரு லகு கிடைக்கும். சேர்ந்தாற்போல் இரண்டு லகு கிடைத்தால் அதைக்குருவென்று கொள்ளவும். குரு கிடைத்த பிறகு அதன் மூன்ருவது எண் கழிபட்டால் குருவைப் புலுதமாக மாற்றிக்கொள்ளவும். கழிபட்ட எண்ணிலிருந்து ஒரு லகு கிடைத்தபின் அடுத்தபடியாக ஒரு கழிபடாத எண்ணிலிருந்து துரிதம் கிடைத்தால் அந்த துரிதத்தைச் சேர்த்துக்கொள்ளக்கூடாது. இப்படிக் கிடைத்த வரையில் அங்கங்களை எழுதிக்கொண்டு தாளத்தின் கால அளவைக்குக் குறைந்தால் குறைவை துரிதங்களாகச் சேர்த்துக்கொள்ளவும். இதுவே முறை.

உதாரணமாக 1, 6 துரிதகால அளவுள்ள ஒரு தாளத்தில் 15வது ப்ரஸ்தாரம் என்ன என்பதைக் கேள்வியாக வைத்துக்கொள்வோம். முதலில் சங்கியை வரிசையை அடியிற்கண்டபடி எழுதவும்:—

1, 2, 3, 6, 10, 19.

கேட்டிருக்கும் ப்ரஸ்தாரத்தின் வரிசை எண் 15. இதை மொத்த எண்ணுகிய 19ல்லிருந்து கழிக்கவும். 4 மிச்சம் கிடைக்கிறது. இதிலிருந்து அந்தியமாகிய 10ஐ கழிக்கப் பார்ப்போம். கழிபடவில்லை. இதனுல் நமக்குவேண்டிய ஒரு துரிதம் கிடைக்கிறது. பிறகு அதே 4ல்லிருந்து உபாந்தியமாகிய 6ஐக்கழிக்கப்பார்ப்போம். அதுவும் கழிபடவில்லை. அதனுல் மற்ெருரு துரிதம் கிடைக்கிறது. பிறகு 4ல்லிருந்து உபாந்தியத்திற்கு அடுத்த மூன்ருவது எண்ணுகிய 3ஐக்கழிக்கப்பார்ப்போம். அது கழிபடுகிறது. கழிபடுவதனுல் நமக்கு ஒருலகு கிடைக்கிறது. மிச்சம் ஆகிய 1ல்லிருந்து 3க்கு அடுத்த எண்ணுகிய 2ஐக்கழிக்கப் பார்ப்போம். அது கழிபடவில்லை. இதனுல் ஒரு துரிதம் கிடைக்கும். ஆனுல் லகுவுக்குப் பின் கிடைப்பதால் இதை விட்டுவிடவேண்டும். பிறகு 1ல்லிருந்து கடைசி எண்ணுகிய 1ஐக்கழிப்போம். கழிபடுகிறது. மிச்சம் ஒன்றுமில்லை. கழிபடுவதனுல் 1லகு கிடைக்கிறது. இப்பொழுது ப்ரஸ்தாரத்தின் உருவம் 1100 என்று ஏற்படுகிறது. இதன் கூடுதல் தாளத்தின் கால அளவைக்குச் சரியாக இருப்பதால் துரிதங்கள் ஒன்றும் சேர்க்கவேண்டியதில்லை. இவ்விதமே நஷ்ட ப்ரச்னைக்கு விடை கூறலாம்.

உத்திஷ்டம் முதலிய ப்ரஸ்தாரத்தின் மற்றப்பகுதிகளின் விவரம் இந்தச்சுவடிகளில் காணப்படவில்லை. அவற்றைப் பற்றிய குறிப்புகளை முகவுரையில் கண்டுகொள்க.

## 11. லயம்

இனி லயம் வருவது:—

கொம்புடையங்கூடுநடு கோலுடையங் கூடுநடுக்
கொம்பனுக்குங் கோலனுக்குங் கூடுநடுக் — கொம்பு
[கோல்
கூடுநடுக் கோல்கொம்பு கூடுநடுக் கொம்பனையாய்
தேடுலயக் கூறுகச்செப்பு (63)

குருநடுவிற் கூர்காலங் கொற்றப்புலிதந்
தருநடுவிற் தாக்காதகாலந் — தெரிவரிய
காகுநடுவிற் காணுத காலங்கள்
ஆகும் லயத்தொகுதி யாய்ந்து (64)

(இதன் பொருள்)

இரண்டு துரித நடுவிற்காலமும்,
இரண்டு லகு நடுவிற்காலமும்,
ஒரு விராமத் துரிதமும்,
ஒரு விராமம் லகுவிற்கூடு நடுவிற்காலமும்,
துரிதமும், லகுவும் கூடு நடுவிற்காலமும்,
குரு நடுவிற்காலமும்,
புலித நடுவிற்காலமும்,
காகபாத நடுவிற்காலமும்,

லயமாம். இன்னமும் இம்முறையே வருகிறகால பேதங்களைக் கண்டு கொள்க.

சொன்னலய மூன்றே துரிதலய மத்திலய
மென்னவிளம்பலய மென்றிவற்றுத் — துன்னுநடை
யோட்ட மதற்கிரெட்டி யுற்ற வதற்குரெட்டி
கூட்டுவதே மூவகையுங் கூறு (65)

முன்சொன்ன லயம் துரிதலயம், மத்தியலயம், விளம்பித லயம் என்று மூன்று வகையாம்.

அவற்றின் நடையாவன :—

துரிதலயம் — ஓட்ட நடை.
மத்தியலயம் — துரிதலயத்துக்கு இரட்டி நடையாகிய முடுகு நடை.
விளம்பிதலயம் — மத்திய லயத்துக்கு இரட்டி நடையாகிய மெத்தின நடை, என்றவாறு.

## 12. யதி

இனி, யதி

இந்தலயப்போக்கே யதியா மதிபேதம்
வந்தவகை மூன்ருகும் வாறுரைக்கில் — முந்தவே
கூறுசமை யாற்றெழுக்கங் கோபுச்சை யென்றுரைத்தார்
ஆறுசடை வாழ்சொக்க ராய்ந்து (66)

என்பது: துரித, மத்திய, விளம்பித லய நடைகளைப்பல வகையாகத்தொகுக்கும் வகையே யதியாம். அவையாவன:—

சமை, சுரோதோவகை, கோபுச்சை எனப்படும்.

இவற்றுள் சுரோதோவகை 'ஆற்றொழுக்கம்' என்றும்வழங்கப்படும்.

### சமையதியின் மூன்றுவகை:—

ஆதியிடை யந்த மடைவே யடைந்தலயம்
ஓதரிய ஒன்றுபோல் உற்பவித்தால் — மாதேகேள்
தாவு துரிதசமை மத்திமச் சமையென்
றேவல்விளம் பச்சமையென் றேற்று (67)

முதலும், நடுவும், கடையும் விகற்பமறவே ஒரே லயகாலமாக நடந்தால் அது 'சமை' யதியாம்.

அப்படி ஆதிமத்தியாவஸானம், ஏகமாக நடக்கிறலயம், துரிதலயமாக நடந்தால் அது துரிதசமை;

மத்திய லயமாக நடந்தால் அது மத்தியசமை;

விளம்பிதலயமாக நடந்தால் அது விளம்பிதசமை யாம் என்றவாறு.

### ஆற்றொழுக்கத்தின் ஆறுவகை:—

ஆற்றொழுக்க மூன்று லயத்தாலே அளந்தளந்து
வேற்றொழுக்க மானவித மூன்றும் — போற்றொழுக்கந்
தொக்க விளம்பஞ் சுடர்மத்தி யந்துரிதந்
தக்கமுதற் பேதமெனச் சாற்று. (68)

உத்த விரண்டா முயராற் றொழுக்கமதி
மத்திமம் வாழ்விளம்பம் வண்துரிதந் — தத்துவஞ்
சொன்னார் சுழல்மத்தி மந்துரிதந் தொல்விளம்பஞ்
சொன்னார் மூன்றாவதற்குச் சூழ்ந்து (69)

என்பது: மூன்று லயத்தாலே வருகின்ற சுரோதோவகை யதி மூன்று பேதமாம், அவை வருமாறு:—

விளம்பித, மத்திய, துரிதலயத்தாலே வருகிற யதி முதற் பேதமாம்.

மத்திய, விளம்பித, துரிதலயத்தாலே வருகிறயதி இரண்டாம் பேதமாம்.

மத்திய, துரித, விளம்பிதலயத்தாலே வருகிற யதி மூன்றும் பேதமாம், என்றவாறு.

இரண்டுலயத் தாற்றொழுக்க மென்பவை மூன்றுந்
திரண்டமத்திமம் விளம்பஞ்சேரும் — மருண்டு
தெரிமத்தி மந்துரிதஞ் சேரவாம் விளம்பம்
அருமைத் துரிதலய மாம். (70)

என்பது: இரண்டு லயத்தாலே வருகிற சுரோதோவகை யதி மூன்றுபேதமாம். அவையாவன :—

மத்தியலயம், விளம்பிதலயம், இவற்றாலே வருகிற யதி முதற் பேதமாம்.

மத்தியலயம், துரிதலயம் இவற்றாலே வருகிற யதி இரண்டாம் பேதமாம்.

விளம்பிதலயம், துரிதலயம் இவற்றாலே வருகிற யதி மூன்றும் பேதமாம்.

ஆக ஆற்றொழுக்கமான சுரோதோவகையதி, மூன்று லயத்தாலே வருகிற மூன்று பேதமும் இரண்டு லயத்தாலே வருகிற மூன்று பேதமுங்கூட்டி, ஆக ஆறு பேதமாம் என்றவாறு.

### கோபுச்சையதியின் ஆறுவகை :—

மொழிந்த கோபுச்சையதி மூன்றுலயங் கொண்டே
மொழிந்த விதந்தானும் மூன்றும்—மொழிந்த
மொய்த்துரித மத்திமமு மொய்விளம் பஞ்சேர்ந்து
மத்துவரு மெப்பொழுது மாய்ந்து (71)

கோத்த விரண்டாங் கோபுச்சை கூர்விளம்பம்
வாய்த்த துரிதமிசை மத்திமமே—காத்துவரும்
பின்னைத் துரிதம் பெருவிளம்ப மத்திமந்தா
னென்னக் கேள் மூன்றுவதென்று (72)

என்பது, கோபுச்சை யென்கிற யதி மூன்று லயத்தாலே வருகிற பேதம் மூன்றும் வருமாறு :—

துரிதலயம், மத்தியலயம், விளம்பிதலயம் இவற்றாலே வருகிற யதி முதற் பேதமாம்.

விளம்பிதலயம், துரிதலயம், மத்தியலயம் இவற்றாலே வருகிற யதி இரண்டாம் பேதமாம்.

துரித லயம், விளம்பித லயம், மத்திய லயம் இவற்றாலே வருகிற யதி மூன்றாம் பேதமாம் என்றவாறு.

உபையலயக் கோபுச்சை யுற்றனவு மூன்றுஞ்
சுபைதுரித மத்திமமே தோன்றுஞ்—சபையிடத்தில்
விளம்ப மத்திமஞ் செறிவாம் மெய்த்துரிதங் கூடி
விளம்ப முற்றும் வேறடைவா மிக்கு (73)

என்பது, இரண்டு லயத்தாலே வருகிற கோபுச்சை யதி மூன்று பேதமும் வருமாறு :—

துரிதலயம், மத்தியலய மிவற்றாலே வருகிற யதி முதற் பேதமாம்.

விளம்பிதலயம், மத்தியலயம் இவற்றாலே வருகிற யதி இரண்டாம் பேதமாம்.

துரிதலயம், விளம்பிதலயம் இவற்றாலே வருகிற யதி மூன்றாம் பேதமாம்.

ஆக கோபுச்சை யதிக்கு, மூன்று லயத்தாலே மூன்று பேதமும், இரண்டு லயத்தாலே மூன்று பேதமும் கூட்டி ஆக ஆறு பேதமுமா மென்றவாறு.

## 13. மார்க்கம்

வளர்ந்த யதிக்குள்ளபடி வைக்குந் துரிதம்
கிளர்ந்த கணைவிற் புலிதங்கீறி—யளந்திவற்றி
லெத்தனை தா னேற்றமிதற் கெத்தனை தா னென்றறிக
அத்தனையு மார்க்க மெனலாம் (74)

என்றது : முன் சொல்லப்பட்ட யதி பேதங்களிலிருக்கின்ற துரிதம், லகு, குரு, புலிதங்களுக்குரிய மாத்திரைகளின் ஏற்றம், குறைவுகளின் பேதங்களுக்கு 'மார்க்கம்' என்று பெயர்.

ஆனபல மார்க்க மாறு வகையாகு
மானமுயர் தெக்கணமே வார்த்திகமே—தேனனையாய்ச்
சித்திரமே சித்திரதரஞ் சித்திரதமஞ் சேர்ந்தவதி
சித்திரமா மென்றே தெளி (75)

என்பது, மார்க்க பேதம் ஆறு வகையாகும். அவையாவன :—

தட்சிணம், வார்த்திகம், சித்திரம், சித்திரதரம், சித்திரதமம், அதிசித்திரம்.

இவற்றின் விபரம் :—

[1] தக்கணமெட்டுத் திகழும் வார்த்திகம் நாலும்
வைக்கரிய சித்திரவகை யிரண்டும்—தக்கபடி
ஒன்றுபெறும் சித்திரதரம் ஓங்குமதி சித்திரதமம்
கண்டுமதி சித்திரங்கால். (76)

இதன் பொருள் :—

| | | |
|---|---|---|
| தக்கணம் | 8[2] | மாத்திரை |
| வார்த்திகம் | 4 | மாத்திரை |
| சித்திரம் என்பது | 2 | மாத்திரை |
| சித்திரதரமென்பது | 1 | மாத்திரை |
| சித்திரதமமென்பது | $\frac{1}{2}$ | மாத்திரை |
| அதிசித்திரமென்பது | $\frac{1}{4}$ | மாத்திரை என்றவாறு. |

1. இதுமுதல் ஸரஸ்வதி மஹால் சுவடியில் ஏடுகள் காணப்படாமையால், சென்னை கீழ்த்திசைச் சுவடி நிலைய எண் R. 518 என்ற சுவடியிலிருந்து எடுத்தெழுதப்படுகின்றது.

2. தட்சிண மார்க்கத்தில் லகுவுக்கு எட்டு மாத்திரை யென்பது பொருள்.

## 14. ஏகமாத்திராலக்ஷணவிதி

பஞ்சகுல வெழுத்தாற் பார்க்குங் கசடதப
செஞ்சொலொரு மாத்திரையே சேருமென — அஞ்சாமல்
அல்லார் குழலாய் அபிஷேகச் சொக்கனுர்
எல்லார் முன் சொன்னு ரிது. (77)

என்பது பரமனுர் உபதேசித்த மார்க்க தாளத்தில் 'லகு' ஐந்து அக்ஷரகாலமுள்ளது. இதன் வாய்ப்பாடு 'கசடதப'. என்றவாறு,

தேசிதாளத்தில் சொல்லாதி முன்கொண்டு
பேசுதுரிதம் பிறத்தியால் — ஓசையுள்ள
நாலெழுத்தோர் மாத்திரையாய் நாட்டினுரப்பரத
நூலாய வல்லோர் நுவன்று. (78)

என்பது, தேசிதாளங்களில் 'லகு' வுக்கு 4 அக்ஷரகாலம்.

## 15. கிரகம்

ஆன்றசமமே அதீதம் அனுகதமென்
றான்று கிரகமொரு மூன்றே — தோன்றும்
இசையுடனே தாள மெழுந்திருக்கக் கண்டால்
அசைவிலது மக்கிரக மாம். (79)

எண்ணு மிசைக்கீதம் இசைக்கின்ற பின்னுதல்
வண்ண லயதாளம் வருமாகில் — பெண்ணமுதே
கிட்டுமதீதக் கிரகவிதி யென்றுரைத்தார்
எட்டுருவச் சொக்கனு ரென்று. (80)

தகைவுற்ற தாளமுதற் ருக்கியபின் தானே
வகைபெற் றுயர்கீதம் வருமாகில் — மிகையுற்ற
அனுகதமென் றுரைத்தார் அபிஷேகச் சொக்கனுர்
பினுகதரப் பெம்மான் பிரித்து. (81)

(இவைகளின் பொருள்)

**1.** கீதமாவது, தத்தகாரத்தாலாகிய சப்தமாவது தாளத்தின் ஆதியிலேகூடி அந்தத்திலே அற்ருல் **அது சமக்கிரகம்** ஆகும்.

2. யாதொரு கீதமாவது, சப்தமாவது தாளத்தின் அந்தத்திலே பற்றி அந்தத்திலே யற்ருல் அது **அதீதக்கிரகம்** ஆகும்.

3. நிருத்த கீதவாத்தியங்கள் யாதொரு தாளத்தின் ஆதியிலே பற்றி ஆதியிலே அற்ருல் அது **அனுகதக்கிரகம்** ஆகும்.

தக்க சமக்கிரகம் தாளமத்திய லயமே
தொக்க வதீதம் துரிதலயம் — மிக்கநெறி
குன்ரு தனுகதமே கொற்ற விளம்பலயம்
என்ரு ரிசைச் சொக்கனுர். (82)

சமக்கிரகம் மத்திய லயத்திற்கும்
அதீதக்கிரகம் துரித லயத்திற்கும்
அனுகதக்கிரகம் விளம்பித லயத்திற்கும்
பொருந்தும்.

## 16. கஞ்ச (காம்ஸ்ய)[1] தாள லக்ஷணம்

கனஞ்சுத்தஞ் சாளக சங்கீரணதாளம்
இனமெத்த இரண்டு நான்கெட்டாகும் — புனைந்தவிரல்
முற்றுமிரண்டே இரண்டரையே மூன்றென்ருர்
தொற்று மகலத் தியல்பு (83)

நற்குமிழொன் ருென்றேகால் ஒன்றரை விரல்கள்
முற்க முழுந்துசணல் முற்றுளைகால் — வர்க்க
வலமால் கபித்தம் ஆதித்தன் வட்டம்
கமலேகுமிழ் கால்துளையளவு காண். (84)

இடமலரோன் சொற்கடக மேதுமதி வட்டம்
தடகுமிழ் மேல்நன்னூல் தலைவி — விடுதுளைக்கால்
நாதஞ் சிவமுபயம் நாண் ராகு கேது
சூதஞ் சினைமுலையாய் சொல். (85)

1. (இவைகளின் பொருள்)
'காம்சியதாளம்' என்கிற ஜாலர் சுத்தம், சாளகம், சங்கீரணம் என்று மூன்றுவகைப்படும்.
இவைகளின் லக்ஷணம் வருமாறு :—

## கனம்

| | |
|---|---|
| சுத்ததாளத்தின் கனம் | 2 பலம் |
| சாளகதாளத்தின் கனம் | 4 பலம் |
| சங்கீரணதாளத்தின் கனம் | 8 பலம் |

## வாயகலம்

| | |
|---|---|
| சுத்ததாளத்தின் வாயகலம் | 2 விரலிடம் |
| சாளகதாளத்தின் வாயகலம் | $2\frac{1}{2}$ விரலிட்ம் |
| சங்கிரணதாளத்தின் வாயகலம் | 3 விரலிடம் |

## குமிழ்

| | |
|---|---|
| சுத்ததாளத்தின் குமிழ் | 1 விரல்கதுமை |
| சாளகதாளத்தின் குமிழ் | $1\frac{1}{4}$ ,, |
| சங்கிரணதாளத்தின் குமிழ் | $1\frac{1}{2}$ ,, |

## துவாரம்

| | |
|---|---|
| சுத்ததாளத்தின் துவாரம் | பயறளவு |
| சாளகதாளத்தின் துவாரம் | உளுந்தளவு |
| சங்கிரணதாளத்தின் துவாரம் | சணல் விதையளவு |

## தெய்வம் :

## வலது புறம்

வலது கைக்குத் தெய்வம் விஷ்ணு
கை முத்திரை கபித்தம்.
தாளவட்டத்திற்குத் தெய்வம் ஆதித்தன்.
குமிழுக்குத் தெய்வம் இலட்சுமி.
துளைக்குத் தெய்வம் காற்று.

## இடது புறம்

இடது கைக்குத் தெய்வம் பிர்மா.
கை முத்திரை கடகாமுகம்.
தாளவட்டத்திற்குத் தெய்வம் சந்திரன்.
குமிழுக்குத் தெய்வம் ஸரஸ்வதி.
துளைக்குத் தெய்வம் காற்று.
இரண்டு கைத் தாளத்தின் கயிற்றிற்குத் தெய்வம்
[இராகு, கேதுக்கள்
எழுந்த நாதம் சிவம், என்றவாறு.

## மணிக்கட்டுக்கும் விரலுக்கும் அதி தேவதைகள்

வண்ண மணிக்கட்டு மலரோன் விரற்குக்
கண்ணனே தர்ச்சனிக்குக் கங்காளன் — எண்ணரிய
மத்திமைக்கு வேலோன் வகுத்த அனுமிகைக்கு
அக்கி கனிஷ்டன் காமவேள். (86)

என்பது: மணிக்கட்டிற்குத் தெய்வம் பிர்மா.

அங்குஷ்ட (கட்டை விரல்)த்திற்குத் தெய்வம் விஷ்ணு.
தர்ச்சனி (ஆள்காட்டி விரல்)க்குத் தெய்வம் ஈசுவரன்.
மத்திமை (நடுவிரல்)க்குத் தெய்வம் முருகன்.
அனுமிகை (மோதிர விரல்)க்குத் தெய்வம் அக்கினி.
கனிஷ்டிகை (சுண்டு விரல்)க்குத் தெய்வம் மன்மதன்.

என்றவாறு.

## 18. ஆவாபாதிக்கிரியை

நீக்கரிதாம் ஆவாபம் நிஷ்கிராமம் விக்ஷேபம்
தாக்குப் பிரவேசமெனச் சம்மையுடன் — வாக்குடைய
தாளமே சன்னிபதம் தக்கவியல் ஏழென்றார்
மாளிகைசூழ் கூடலார் வந்து. (87)

என்பதாவது: ஆவாபம், நிஷ்கிராமம், விக்ஷேபம், பிரவேசம், சம்மை, தாளம், சன்னிபாதம், ஆக தாளக்கிரியை ஏழுவகை. அவைகளின் லக்ஷணம் :—

இடக்கை விரலசைத்தலே நன்றாம் ஆவாபம்
மடக்கொடியே யவ்விரலமர்ந்து — துடக்கறவே
ஏய்ந்த வகையில்லாமை நிஷ்கிராம மென்றுரைத்தார்
ஆய்ந்தரவை யணிய இடுவார். (88)

ஆன வலக்கை யகற்றியுடன் தூக்குவது
மீனவிழி மானனையாய் விட்சேபம் — போன
வலக்கை இடக்கை வந்துறுமே யாமாகில்
தாக்குப் பிரவேச மெனச் சாற்று. (89)

சாத்திலிருகரமும் தம்மிலுடன் பகர்ந்தால்
ஏத்த வலக்கை யெழில் செம்மை—போற்றரிய
வாமக்கை தாளமாம் வந்தமர்க் கையிரண்டும்
தாமொத்து சன்னிபதம் தான். 90

மேற் சொல்லிய மூன்று வெண்பாக்களின் பொருள்:—

'ஆவாபம்' என்பது இடக்கை யசைத்தல்.

'நிஷ்கிராமம்' என்பது அசைவது நிற்கிறது.

'விட்சேபம்' என்பது வலக்கையகற்றித் தூக்குகிறது.

வலதுகையும் இடதுகையும் தாக்குகிறது 'பிரவேசம்'

'சம்மை' என்பது வலக்கையைச் சற்றே தூக்கித்தட்டுதல்.

'தாளம்' என்பது இடக்கையைத் தூக்கித்தட்டுதல்.

இரண்டுகையையும் ஒத்தல் 'சன்னிபாதம்' என்றவாறு.

## 19. நூற்றெட்டுத் தாளங்கள்.

### 1. சச்சபுடம் ( चच्चत्पुटम् சச்சத்புடம்)

சச்ச புடமே வக்கிரமிரண்டும்
பொற்புடன் சூலமும் புலிதமு மாமே*

S S I S = (8)

சச்ச புடமே தனுவிருகோலே
வச்ச புலித மாத்திரை யெட்டே

S S I S = (8)

### 2. சாசபுடம் ( चाचपुटम् சாசபுடம்)

சாசபுடமே நடுவிரண்டிலகு
பேசிய முன்குருப் பின் சிலை வருமே

S I I S = (6)

சாச புடமே யிருகுரு நடுவே
பேசு மிரு கோல் பெறுமாறு மாத்திரையே

S I I S = (6)

---

* சச்சத்புடம், சாசபுடம், ஷட்பிதாபுத்ரகம், ஸம்பக்வேஷ்டாகம், உத்கட்டம், இந்த ஐந்து தாளங்களும் ஆதியில் ஏற்பட்ட தாளங்கள். அவற்றின் பெயர்களிலுள்ள எழுத்துக்களே தாளத்தின் லகு, குரு, ப்லுதம் முதலிய அங்கங்களின் அமைப்பைக் குறிக்கும். இதன் விவரம் முகவுரையிற் காண்க.

1. ताळे चच्चत्पुटे ज्ञेयं गुरुद्वंद्वं लघु प्लुतम् — ஆதிபரதம்
वृद्धौ स्यादनिलस्त्र्यङ्गः सोऽयं चच्चत्पुटो भवेत्

பரதார்ணவம்

2. गुरुर्लघू गुरुश्चैव भवेच्चाचपुटाभिधे । ஆதிபரதம்
गुर्वोर्मध्ये चाचपुटे लघुद्वंद्वं प्रकीर्तितम् ।

பரதார்ணவம்.

3. சற்பிதா ( षट्पितापुत्रकम् ஷட்பிதாபுத்ரகம்)

சற் பிதா வுந்தலே கடை புலிதமாம்
முட் கடை யிருவில் லுடனிரு கோலே

S̀ I S S I S̀ = (12)

சற்பிதா உயிர் கோலிரு சிலே கோல்பணி
யுற்பன மாத்திரை யோரீ ராறே.

S̀ I S S I S̀ = (12)

4. சம்பக்கேட்டம் (सम्पकेष्टाकम्
ஸம்பக்வேஷ்டாகம்)

சம்பக்கேட்டம் தலேகடை புலித
மும்பற் புரஞ்†சிலே யுள் கிடந்தனவே

S̀ S S S S̀ = (12)

சம்பொற் கேட்டம் தருமுயிர்த் தமிழ்க்குரு
நம்பற் புலிதமுன் ஞன்கே மாத்திரை

S̀ S S S S̀ = (12)

---

3. पलगा गलपार्श्वेव षट्पितापुत्रकस्य यत् । ஆதிபாரதம்
पोलोगो गलपार्श्वेव षट्पितापुत्रकः स्मृतः । பாரதார்ணவம்

†புரம் = த்ரிபுரம் = மூன்று

4. मगणस्य प्लुताद्यंतं, संपकेष्टाकसंज्ञके ஆதிபாரதம்
मगणः स्यात्प्लुताद्यंतः संपकेष्टाकसंज्ञके பாரதார்ணவம்

5. உற்கட்டிதம் ( उद्घट्टम् உத்கட்டம்)

உற் கட்டிதஞ் சிலை யொண் புரமாகி

S S S = (6)

உற்கட்டிதம் வில்லொரு மூன்றுரு
முற்கட்டின் மாத்திரையிருமூன்றே

S S S = (6)

6. ஆதி ( आदि ஆதி )

நல்கிய ஆதி செவ்வை யொன் றெனுமே

I= (1)

ஆதிதாள மம்பொன்றுக
ஓதினர் நூலோ றொன்றே மாத்திரை

I=(I)

---

5. उद्घट्टे मगणश्चैव भरतस्य यथाक्रमम् ஆதிபரதம்
उद्घट्टे मगणस्त्वेकः பரதார்ணவம்

6. आदिताळे लघुः स्मृतः। ஆதிபரதம்
त्वादिताळे लघुः स्मृतः பரதார்ணவம்,

### 7. தற்பணம் ( दर्पणः தற்பணம் )

தற்பணமிருசுழி தன்னுடன் வக்கிரம்
நிற்பது மேழாய் நின்றதென்றனரே.

0 0 S=(3)

தற்பண மிரண்டு சந்திரன் பின்சிலை
நிற்பனமாத்திரை நீதியுமூன்றே

0 0 S=(3)

### 8. சச்சரி (चच्चरिः சச்சரி).

சச்சரி விந்துத் தயங்கிய விராமம்
வட்டமுங்கோலும் வருமுறையெட்டே

0δI0δI0δI0δI0δI0δI0δI0δI (18)

சச்சரி விழியீரெட்டாம் விராமமங்குகால்
இச்சையாலிசை பதினெட்டே மாத்திரை

0δI0δI0δI0δI0δI0δI0δI0δI

---

7. दर्पणे स्याद्द्रुतद्वंद्वं गुरुश्चैकः प्रकीर्तितः—ஆதிபரதம்
दर्पणे स्याद्द्रुतद्वंद्वं गुरुश्चैकः प्रकीर्तितः–பரதார்ணவம்

8. अष्टकृत्वस्तु चच्चर्यां विरामान्तौ द्रुतौ लघुः–ஆதிபரதம்
अष्टकृत्वस्तु चच्चर्यां विरामान्तद्रुता लघुः–

0 δ 0 δ 0 δ 0 δ 0 δ 0 δ 0 δ 0 δ I—பரதார்ணவம்

9. சிங்கலீலை (सिंहलीला ஸிம்ஹலீலா)

சிங்க லீலை செழுங்கணை சுழிதமிழ்
நங்கணையேகம் நயனத்து நவமே

I 0 0 0 I=(3½)

சிங்கலீலை செவ்வை முச்சுழி
அங்கை நேரா மூன்றரையே மாத்திரை

I 0 0 0 I=(3½)

10. கந்தர்ப்பம் (कन्दर्पः கந்தர்ப்பம்)

கந்தர்ப்பஞ்சுழி கதிர்மதி ஒருகோல்
பந்தச்சிலைவிழி படுமது பத்தே

0 0 I S S=(6)

கந்தற்பம் கண்ணிணை நேராங்குரு
வந்தபின்னிரு மாத்திரையாறே

0 0 I S S=(6)

---

9. सिंहलीलाविधातव्यं लध्वाद्यंतं द्रुतत्रयम्—ஆதிபாதம்
सिंहालिते विधातव्यं लध्वाद्यंतं द्रुतत्रयम्—
பாதார்ணவம்

10. द्रुतद्वंद्वं यकारश्च कन्दर्पः परिकीर्तितः—ஆதிபாதம்
द्रुतद्वंद्वं यकारश्च कन्दर्पं परिकीर्तितः—பாதார்ணவம்

11. சிங்க விக்கிரமம் (सिह्मविक्रमः ஸிம்ஹ விக்ரமம்)

*சிங்கவிக்கிரமம் சிலேதமிழ்கணே உயிர்*
*நங்கணே சிலேயுயிர் நற்பதினென்றே*

S S S I S̀ I S S̀=(16)

*சிங்கவிக்கிரம முச்சிலே கோலுயிர்*
*துங்க வில்லுயிரா மாத்திரை பதினாறே*

S S S I S̀ I S S̀=(16)

12. சீரங்கம் (श्रीरङ्गः ஸ்ரீரங்கம்).

*சீரங்கங்கணே செகணம் தண்டெனப்*
*பாரமப்படுமது பனிரண்டாமே*

I I S I S̀=(8)

*சீரங்க மிருகோல்சிலே கோலுயிர்*
*சோராங்க மாத்திரையு நீதியுமெட்டே*

I I S I S̀=(8)

---

11. सिह्मविक्रमताळे स्युः मगणो लपलागपौ—*ஆதிபரதம்*
*ஷை ஷை ஷை ஷை பரதார்ணவம்*

12. श्रीरङ्गताळे सगणो लघुरेकः प्लुतस्तथा—*ஆதிபரதம்*
श्रीरङ्गसंज्ञके ताळे सगणो लप्लुतौ मतौ—*பரதார்ணவம்*

13. இரத லீலை (रतिलीला ரதி லீலா).

இரதலீலை யிருகோலிருபிறை
பாசம் வருவது பதின்மூன்ருமே

I I S S=(6)

இரத லீலை யிருகோலிருசிலை
சரதமானசண் மாத்திரையே

I I S S=(6)

•

14. அரங்கதாளம் (रङ्गताळः ரங்கதாளம்)

அரங்கதாளம் ஆயன்சுழியே
பரங்கொள் தனுமுறை பதினாலாமே

0 0 0 0 S=(4)

அரங்கதாள மதனுற் சுழிகுரு
பரங்கொள் மாத்திரை பழ மறையாமே

0 0 0 0 S=(4)

---

13. रतिलीले विधातव्यं लघुद्वंद्वं गुरुद्वयम्—ஆதிபரதம்
रतिलीले विधातव्यं लघुरेको गुरुद्वयम्—பரதார்ணவம்

14. चत्वारो रङ्गताले स्यात् द्रुता गुरुरतः परम्—ஆதிபரதம்
चत्वारो रङ्गताळे स्यात् गुर्वन्तदचतुष्टयम्—
பரதார்ணவம்

15. பரிக்கிரமம் (परिक्रमः பரிக்ரமம்)

*பரிக்கிரமஞ்சுழி பதமா மிருகணை*
*முரிச்சிலை யிதினில் மூவஞ்செனுமே*

0 0 I I S=(5)

*பரிக்கிரமம் கண்ணிணை பகர்வானிரண்டு*
*வரிச்சிலை மாத்திரை யஞ்சே யாகும்*

0 0 I I S=(5)

16. பிரத்தியாங்கம் (प्रत्यङ्गः ப்ரத்யங்கம்)

*பிரத்தியாங்கப் பிறை மூன்றிருகணை*
*பறைத்தலாமிதே பதினொருமே*

S S S I I=(8)

*பிறத்தியாங்கம் பிறை மூன்றிருகோல்*
*நிறுத்தியாங்கம் எட்டே மாத்திரை*

S S S I I=(8)

---

15. द्रुतयुगळात्सगणान्तो भवति च ताळः परिक्रमाख्यानः—
*ஆதிபரதம்*
परिक्रमे द्रुतद्वंद्वं सगणस्तदनन्तरम्—*பரதார்ணவம்*

16. प्रत्यङ्गसंज्ञके ताळे मगणः स्याल्लघुद्वयम्—*ஆதிபரதம்*
प्रत्यङ्गसंज्ञके ताळे मगणः स्याल्लघुद्वयम्—*பரதார்ணவம்*

### 17. கேச லீலை (गजलीला கஜலீலா)

கேசலீலை கோல் கிளர் மறைகடை
கோல்விராமம் பதினேழாமே

I I I Ì=($4\frac{1}{4}$)

கெசலீலை நாற்கோல் கேழ்பின் விராமம்
வசையினு நாலேகால் மாத்திரை

I I I Ì=($4\frac{1}{4}$)

### 18. திரிபின்னம் (त्रिभिन्नः த்ரிபின்னம்)

திரிபின்னொருகோல் சிலையொரு புலிதம்
பரிவினில் வருவது பதினெட்டாமே

I S S̀=(6)

திரிபின்னக்கோல் சிலையே புலிதம்
முருகன்றன்னது முகமே மாத்திரை

I S S̀=(6)

---

17. लचतुष्कं विरामान्तं गजलीले प्रकीर्तितम्—ஆதிபரதம்
लचतुष्कं विरामान्तं गजलीले प्रकीर्त्तितम्—பரதார்ணவம்

18. लघुर्गुरुः प्लुतश्चैव त्रिभिन्ने परिकीर्तितः—ஆதிபரதம்
लघुर्गुरुः प्लुतश्चैव त्रिभिन्ने परिकीर्तितः—பரதார்ணவம்

19. வீரவிக்கிரமம் (वीरविक्रमः வீரவிக்ரமம்)

*வீரவிக்கிரமம் விழிகோலிருசுழி*
*வாரவக்கிரமொடு பத்தொன்பதுவே*

I I 0 0 S=(5)

*வீரவிக்கிரமம் வியன்கோல் இருவிழிசிலையிரு*
*ஆரவிக்கிரம மாத்திரையேழே*

I I 0 0 S S=(7)

20. அன்னலீலை (हंसलीला ஹம்ஸலீலா)

*அன்னலீலை அம்பிரண்டீற்றடி*
*என்னவிலக்கம் இருபதாமே*

I̖ I̖=($2\frac{1}{2}$)

*அன்னலீலை யம்புனை விராம*
*மின்னலீலை யிரண்டரை மாத்திரையே*

I̖ I̖=($2\frac{1}{2}$)

---

19. वीरविक्रमताळे तु लौ द्रुतौ च गुरुः स्मृतः—*ஆதிபரதம்*
वीरविक्रमताळे तु लौ द्रुतौ च गुरुः स्मृतः-*பரதார்ணவம்*

20. सविरामं लघुद्वंद्वं ताले स्याद्धंसलीलके— *ஆதிபரதம்*
सविरामं लघुद्वंद्वं ताळे स्याद्धंसलीलके—*பரதார்ணவம்.*

21. வன்னபின்னம் (**वर्णभिन्नः** வர்ணபின்னம்)

*வன்னபின்னம் வள்ளவிலக்கம்*
*என்னவிருசுழிகோல் வில்லாமே*

0 0 I S=(4)

*வன்னபின்ன மதிகோலிருசுழி*
*சொன்னசொன்ன சுருதி மாத்திரையே*

S I 0 0=(4)

22. ராசசூடாமணி (**राजचूडामणिः** ராஜசூடாமணி)

*ராசசூடாமணி இருபத்திரெண்டெனப்*
*பேசியசுழி தமிழ்பெற்றிருகணையொடு*
*மாசறு மிருசுழி வருகன குருவே*

0 0 I I I 0 0 I S=(8)

*இராசசூடாமணி மதியிருமுக்கோல்*
*விராவிரு விழிகோல் வில்லெண் மாத்திரை*

0 0 I I I 0 0 I S=(8)

---

21. **वर्णभिन्नादिताले तु द्रुतद्वंद्वं लघुर्गुरुः**—*ஆதிபரதம்*
**वर्णभिन्नाभिधे ताले द्रुतद्वंद्वं लघुर्गुरुः**—*பரதார்ணவம்*

22. **राजचूडामणौ द्रुतौ नश्चद्रुतौ लगौ**—*ஆதிபரதம்*
**राजचूडामणौ ताले द्रुतौ लाश्च द्रुतौ लगौ**-*பரதார்ணவம்*

23. அரங்கத்தியோதம் (रङ्गद्योतः ரங்கத்யோதம்)

*அரங்கத்தியோதனம் அணிதமிழ் குருவா*
*மிரங்கப் பதிமினிருபத்து மூன்றே*

S S S I S̀=(10)

*அரங்கோதி வில்மூன்றம்பு மராளம்*
*புரங்கோதில்லான் புலிதமும்பத்தே*

S S S I S̀=(10)

24. ராசதாளம் (राजतालः ராஜதாளம்)

*ராசதாளமிருபத்து நான்கெனப்*
*பேசிய பிறையுயிர் பின்னிருகூழியுட*
*ஞேசையிலோர்கணை யோர் புலிதம்மே*

S S̀ 0 0 S I S̀=(12)

*அரசதாளமாங் குருபுலிதம்*
*பருவிழி விற்கோல் பாம்புமீராறே*

S S̀ 0 0 S I S̀=(12)

---

23. रङ्गोद्द्योतनताळे तु मगणो लप्लुतावपि—*ஆதிபரதம்*
रङ्गद्योतनताळे तु मगणो लप्लुतावपि—*பரதார்ணவம்*

24. गपौ द्रुतौ च गलपा राजताळे च विश्रुताः—*ஆதிபரதம்*
गपौ द्रुतौ गलौ पश्च राजताळे प्रकीर्तितः—*பரதார்ணவும்*

25. சிங்கவிக்கிறிடை (सिह्मविक्रीडितः ஸிம்ஹவிக்ரீடிதம்)

சிங்கவிக்கிறிடி செழுங்கணை யிரண்டு
மின்குரு வம்பொடு மேல் குகுருநாகங்
தங்கிய தனுவுயிர் தானணையாயு
மிங்கிதப் புலித யிருபத்தஞ்சே

I I S̀ S I S S̀ I S̀=(17)

சிங்கவிக்கிறிடை செவ்விணைமின்கோல்
துங்கவில் பிறந்த கோல் புலிதம் மூவஞ்சு மாத்திரையே

I I S̀ I S S̀ I S̀=(15)

26. வனமாலி (वनमाली வனமாலீ)

வன்னமாலி மறைசுழி யிருகோல்
பின்னிருசுழிபிறை யிருபத்தாறே

0 0 0 0 I I 0 0 S=(7)

வனமாலிநாலு மதியிருகணைவிழி
தனமாங்குருவே சத்தமாத்திரை

0 0 0 0 I I 0 0 S=(7)

---

25. सिंहविक्रीडिते लौ पो गयोर्मध्ये पयोश्च लः—ஆதிபரதம்
लपौ गलौ पो गपलप्लुताश्चेत्-इति सिंह्मविक्रीडितः—
பரதார்ணவம்

I S̀ S I S̀ S S̀ I S̀

26. वेदद्रुतालौ द्रुतौ स्युः वनमालिनि गस्ततः—ஆதிபரதம்
वेदद्रुतालौ दयुगं गुरुः प्रान्ते निवेशितः ।
वनमाली भवेत्तालो गदितः शास्त्रवेदिभिः॥ பரதார்ணவம்

27. சதுரச்சிரம் (चतुरश्रः சதுரச்ரம்)

*சதுரச்சிரஞ்சிலே இருகணை யிருபிறை*

*யிதுவொரு புலித மிருபத்தேழே*

S I I 0 0 Ṡ=(8)

*சதுரச்சிரவன்னங் குருவிருசாபம்*

*இருவிழி அதிக புலிதமாத்திரையே*

S I I 0 0 Ṡ=(8)

28. திரியச்சிரம் (त्र्यश्रः த்ர்யச்ரம்)

*திரியச்சிர மிருகோலிருகுழியாய்ப்*

*பிணியக்கணையது மிருபத்தெட்டே*

I I 0 0 I I=(5)

*திரியச்சிரவனன் செவ்வைவிழியிரு*

*இருகோல் அரியச் சிலைமாத்திரையே*

I 0 0 I I S=(6)

---

27. गुरुर्लघू द्रुतौ गश्च वर्णः स्याच्चतुरश्रकः—*ஆதிபரதம்*

S I I 0 0 S =(7)

गुरुर्लघू द्रुतौ गश्च वर्णः स्याच्चतुरश्रकः—*பரதார்ணவம்*

S I I 0 0 S=(7)

28. लघुर्द्रुतौ लघुर्गश्च त्र्यश्रवर्णे प्रकीर्तिताः—*ஆதிபரதம்*

I 0 0 I S=(5)

लघुर्द्रुतौ लघूगश्च त्र्यश्रवर्णे प्रकीर्तिताः—*பரதார்ணவம்*

I 0 0 I I S=(6)

## 29. [1]மிச்சிரம் (मिश्रः மிச்ரம்)

மிச்சிரஞ்சுழி கதிர் வெதுக்கடை
அச்சுயிர் பிறைசுழி யணியிருகுருவு
மிச்சையில் கண்டது மிருபதின் நவமே

0 0 δ 0 0 δ 0 0 δ 0 0 δ S̀ S 0 0 S S=(17)

மிச்சிரவன்னம் விராம முச்சுழிப்பின்
முச்சிலையாக முறைமையிற் புலிதமா
கச்சிலை விழியிரு கார்முகம் கார்சிலை
யிச்சையுடன் பதினேழே மாத்திரை

0 0 δ 0 0 δ 0̧ 0 δ 0 0 δ S̀ S 0 0 S S=(17)

## 30. அரங்கப்பிரதீபம் (रङ्गप्रदीपः ரங்கப்ரதீபம்)

அரங்கப்பிரதீப மணிவிழியிருகோல்
முரங்கப்பிஞரமின் முப்பதுமாகும்

S S I S S̀ = (10)

அரங்கதாள மணிகுருகோல் குரு
பரங்கொள் பாம்பொடும் பத்தேமாத்திரை

S S I S S̀ = (10)

---

1. மிச்சிரதாளத்திற்குப் பிறகு 'கண்டவர்ணம்' என்னும் தாளம் ஆதிபாரதத்திலும் பரதார்ணவத்திலும் காணப்படுகின்றது.

29. प्रतित्रयं विरामाः स्युः मिश्राख्ये द्वादश द्रुताः—ஆதிபாரதம்

प्रतितुर्यं विरामान्तं मिश्राख्ये द्वादश द्रुताः—

0 0 0 δ 0 0 0 δ 0 0 0 δ பாரதார்ணவம்

30. रङ्गप्रदीपताळे स्यात्तगणो गप्लुतावति—ஆதிபாரதம்

रङ्गप्रदीपताळे स्यात्सगणो गः प्लुतो यदि—பாரதார்ணவம்

I I S S S̀

31. அன்னநாதம் (हंसनादः ஹம்ஸநாதம்)

*அன்னநாத மம்புமின்னிரு சுழி*
*முன்னுரையோருயிர் முப்பத்தொன்றே*

I S̀ 0 0 S̀ = (7)

*அன்னநாதமணி பாம்புவிழியிரு*
*சொன்னபுலிதமும் சொல்லேழ் மாத்திரை*

S̀ 0 0 S̀ = (7)

32. சிங்கநாதம் (सिह्मनादः ஸிம்ஹநாதம்)

*சிங்கநாதஞ் செங்கோலிருசிலை*
*யுங்கோல் சிலையுயர் முப்பத்திரண்டே*

I S S I S=(8)

*சிங்கநாதஞ் சிலையொன்று சராளமாஞ்*
*சங்கையான சிலையிருகோலே*

S I S S I=(8)

---

31. हंसनादो लघुः पश्चात् प्लुतयोरितरौ द्रुतौ—*ஆதிபரதம்*

लप्लुतौ द्वौ द्रुतौ प्लुत – हंसनादः—*பரதார்ணவம்*

32. यगणो लो गुरुश्चैव सिह्मनादे प्रकीर्तिताः—*ஆதிபரதம்*

I S S I S=(8)

यगणो लो गुरुश्चैव सिह्मनादे निरूपितः—*பரதார்ணவம்*

33. மல்லிகாமோதம் (मल्लिकामोदः மல்லிகாமோதம்)

*மல்லிகாமோதமம் பீரிரண்டிருசுழி*
*முல்லைபோல் நகையாய் முப்பத்துமூன்றே*

I I 0 0 0 0=(4)

*மல்லிகாமோத நேர்வாளி நாற்சுழி*
*சொல்லிய மாத்திரை நாலேயாமே*

I I 0 0 0 0=(4)

34. சரப்லீலை (शरभलीला சரபலீலா)

*சரபலீலை சதுக்கணை இடைச்சுழி*
*மூபண் (?) முறையால் முப்பத்துநாலே*

I 0 I 0 I 0 I 0=(6)

*சரபலீலை சரமிணை நாற்சுழியிணை*
*வாளி மாத்திரை யாறேயாமே*

I I 0 0 0 0 I I=(6)

---

33. ताले च मल्लिकामोदे लद्वयं खचतुष्टयम्—*ஆதிபரதம்*
ताले तु मल्लिकामोदे लद्वयं खचतुष्टयम्—*பரதார்ணவம்*

34. लघुद्रुतचतुष्कं स्यात् शस्तं शरभलीलके—*ஆதிபரதம்*

I 0 I 0 I 0 I 0 I=(6)

लघूद्रुतचतुष्कं लौ स्यातां शरभलीलके—*பரதார்ணவம்.*

I I 0 0 0 0 I I I=(6)

35. அரங்காபரணம் (**रङ्गाभरण:** ரங்காபரணம்)

*அரங்காபரண மணிகுரு வாயே*
*முரண்கோலிரண்டுயிர் முப்பத்தஞ்சே*

S S I I S̀=(9)

*அரங்காபரண மானச் சிலேயிரண்டு*
*சரங்கோலிரு சர்ப்பம் தருநவ மாத்திரையே*

S S I I S̀=(9)

36. துரங்கலீலை (**तुरङ्गलीला** துரங்கலீலா)

*துரங்கலீலை சுழியிரண் டொருகோல்*
*முரங்கு நகையாய் முப்பத்தாறே*

0 0 I=(2)

*துரங்கலீலை சுழியிருகோலே*
*பிறங்க மாத்திரை யிரண்டேயாமே*

0 0 I=(2)

---

35. **तगणो लप्लुतौ कार्यौ रङ्गाभरणसंज्ञके**—*ஆதிபரதம்*
**तगणो लप्लुतौ कार्यौ रङ्गाभरणसंज्ञके**—*பரதார்ணவம்*

36. **तुरङ्गलीले ताळे स्यात् द्रुतद्वंद्वं लघुत्रयम्**— *ஆதிபரதம்*

0 0 I I I

**तुरङ्गलीले ताळे स्यात् द्रुतद्वंद्वं लघुस्ततः**—*பரதார்ணவம்*

37. சிங்கநந்தனம் (सिह्मनन्दनः ஸிம்ஹநந்தனம்)

சிங்கநந்தன மிருசிலே கணைபுலிதந்
துங்க வம்பொடு சிலேசுழிவிழியிரு
விலங்கொரு கோல் மின்னம் புயிராமிரு
மூங்கறும்புட லகு முப்பத்தேழே

S S I S̀ I S 0 0 S S I S̀ I S̀ S I I + (32)

சிங்கநந்தன மிருசிலே நோாவுயிர்கொள்
துங்கம்வில்லொரு யிருசுழிதுணைவில் கோல்பின்
புங்கமின்சிலே யிருபுங்கம் பறவை
யங்குமேயுமை யறமே மாத்திரை

S S I S̀ I S 0 0 S S I S̀ I S̀ S I I + (32)

38. செயத்திரு (जयश्रीः ஜயஸ்ரீ)

செயத்திரு விற்கணை சிலேயம்பொடுபினும்
முயர் சிலேயாவது முப்பத்தெட்டே

S I S I S=(8)

செயத்திருதாளம் சிலேநேர் சிலேகோல்
வகைத்தேறியவில் லெட்டே மாத்திரை

S I S I S=(8)

---

37. चच्चत्पुटो रतितालो दर्पणः कोकिलप्रियः ।
अभङ्गमुद्रितौ तालौ षडेते सिह्मनन्दनः ॥ ஆதிபரதம்
तपौ लो गो द्रुतौ गौलपलपागचलद्वयम्—பரதார்ணவம்

38. रगणो लो गुरुश्चैव जयश्रीरिति कथ्यते—ஆதிபரதம்
रगणो लो गुरुश्चैव जयश्रीरिति कथ्यते—பரதார்ணவம்

39 · விசயானந்தம் (विजयानन्दः விஜயாநந்தம்)

*விசயானந்தம் விழிகணை[1] தமிழ்குரு*

*முசியாவருவது முப்பதில் நவமே*

I I S S S=(8)

*விசயானந்தம் வியனிருகோல்மூன்*

*றிசைய வக்கிரமெட்டே மாத்திரை*

I I S S S=(8)

•

40. பிரதிதாளம் (प्रतिताल: ப்ரதிதாளம்)

*பிரதிதாளம் பின்னிருசுழிமுன்*

*நிறைதரும் இருகோல் நாற்பதுவாகும்*

I I 0 0=(3)

*பிரதிதாளம் பெறுசரமிரண்டு*

*யிருசுழியளவு மூன்று மாத்திரையே*

I I 0 0=(3)

---

39. भवेयुर्विजयानन्दे लद्वयं गुरवस्त्रयः—*ஆதிபரதம்*

भवेयुर्विजयानन्दे लद्वयाद्गुरवस्त्रयः—*பரதார்ணவம்*

40. लौ द्रुतौ प्रतिताले स्यात्—*ஆதிபரதம்*

लौ द्रुतौ प्रतिताले स्यात्—*பரதார்ணவம்*

---

1. *தமிழ்=முத்தமிழ்=மூன்று*

41. துதியகம் (द्वितीयकः த்விதீயகம்)

துதியம் கணையிரு சுழியுளதாகும்
நதியன் புடையாய் நாற்பத்தொன்றே

। 0 0 =(2)

துதியகம் மொருகோல் துணையிருசுழி
முதிய பொதிய முனிவன் வாக்கே

। 0 0=(2)

42. மகரந்தம் (मकरन्दः மகரந்தம்)

மகரந்தஞ்சுழி யிரண்டெனவே நடு
நவரம் கோல்புரம் காற்பத்திரண்டே

0 0 । । । S=(6)

மகரந்தமிருசுழி வாளிமூன் றொருசிலை
பகர்ந்த மாத்திரை யாறெனச்சொல்லே

0 0 । । । S=(6)

---

41. द्रुतौ लश्च द्वितीयके—ஆதிபாதம்

0 0 ।=(2)

द्रुतौ लश्च द्वितीयके—பரதார்ணவம்

0 0 ।=(2)

42. मकरन्दे द्रुतद्वंद्वं लघुत्रयमतो गुरुः —ஆதிபாதம்

मकरन्दे द्रुतद्वंद्वं लत्रयञ्च गुरुस्ततः—பரதார்ணவம்

43. கீர்த்திதாளம் (**कीर्तिताळः** கீர்த்திதாளம்)

*கீர்த்திதாளம் கலைகிளர் உயிரிரு*

*நாற்றிசையின் சொல் நாற்பத்துமூன்றே*

| S S̀ S | S̀=(12)

*கீர்த்திதாளம் கோல்வில் மாண்சிலை*

*வளர்த்தவாளி வன்புலிதம்*

*வகுத்த மாத்திரை பன்னிரண்டே*

| S S̀ S | S̀=(12)

44. விஜயதாளம் (**विजयताळः** விஜயதாளம்)

*விசையம் உயிர்பிறை மின்சிலையெனவே*

*நசைபிற மொழிவது நாற்பத்துநாலே*

S̀ S S̀ S=(10)

*விசையதாள மின்உயிர் பின்சிலை*

*யிசையா மரவமிடையில் தனுவு*

*மிசையுடன் மாத்திரை யீரைந்தாமே*

S̀ S S̀ S=(10)

---

43. **लगौ पगौ लपौ चैव कीर्तिताळे प्रकीर्तितः**— *ஆதிபரதம்*

**लगौ पगलपाश्चैव कीर्तिताळे प्रकीर्तितः**— *பரதார்ணவம்*

44. **प्लुतो गश्च प्लुतो लश्च ताळे विजयसंज्ञिके**—*ஆதிபரதம்*

S̀ S S̀ |=(9)

**प्लुतो गश्च प्लुतो गश्च ताळे विजयसंज्ञके**— *பரதார்ணவம்*

S̀ S S̀ S=(10)

45. ஜெயமங்களம் (**जयमङ्गलः** ஜயமங்களம்)

*ஜெயமங்கலமே இருசெங்கோல் பிறை*

*நயனங்கணையென நாற்பத்தைந்தே*

I I S I I S=(8)

*ஜெயமங்களம் பிருசாம்தனுவுட*

*னிருகோல் சிலையுடன் மாத்திரையெட்டே*

I I S I I S=(8)

46. ராசவித்யாதரம் (**राजविद्याधरः** ராஜவித்யாதரம்)

*ராசவித்யாதரங் கணை பிறைபின்னொடு*

*நாசியில் சுழிவிழி நாற்பத்தாறே*

I S O O=(4)

*ராசவித்தை கோல்சிலை யிருவிழி*

*வேதமாத்திரை விளம்பினாலே*

I S O O=(4)

---

45. **सकारश्च सकारश्च जयमङ्गलताळके**— *ஆதிபரதம்*
**सकारश्च सकारश्च जयमङ्गलसंज्ञके**— *பரதார்ணவம்*

46. **लघुर्वक्रो द्रुतौ ताळे राजविद्याधराभिधे**— *ஆதிபரதம்*
**लघुर्वक्रो द्रुतौ ताळे राजविद्याधराभिधे**— *பரதார்ணவம்*

47. ஆரோகிமட்டியம் (मठ्यताल: மட்யதாளம்)

ஆரோகிமட்டியம் அம்பிரண்டொருவில்
நாரோர் சுழிமறை நாற்பத்தேழே

I I S 0 0 0 0=(6)

ஆரோகிமட்டம் அம்பிணை வக்கிரம்
சரோதிவட்ட மிருசுழி மாத்திரையஞ்சே

I I S 0 0=(5)

48. நேத்தமட்டியம் (नेत्रमठ्य: நேத்ரமட்யம்)

நேத்தமட்டம் சிலை சகணங்குரு
நாற்றிசை புள்ளடி நாற்பத்தெட்டே

S I I S S + =(12)

நேத்தமட்டம் வில்லொன்றிணைசரம்
காத்தவிருகுரு காகமுமாமே மாத்திரை பன்னிரண்டே

S I I S S + =(12)

---

47. सकारान्मठ्यताळे स्यात् लसितं खचतुष्टयम्—
ஆதிபாதம்

I I S 0 0 0 0=(6)

सकारं मंठताळे स्यात् ततोऽग्रे लचतुष्टयम्—
பாதார்ணவம்

I I S I I I I=(8)

48. भकारतो गुरुद्वंद्वं निश्शब्दमथवा भवेत्—ஆதிபாதம்

S I I SS + =(12)

तकारतो गुरुद्वंद्वं नशब्दमन्यमंठके—பாதார்ணவம்

S S I S S +=(13)

49. பிரகாசமட்டியம் (प्रकाशमठ्यः ப்ரகாசமட்யம்)

*பிரகாசமட்டம் பெருந்தமிழ் கோல்குரு*
*நிறைகாவிழிகணை நாற்பதில் நவமே*

I I I S I I=(7)

*பிரகாசமட்டம் முக்கோல் குருவென*
*இறைவார் சரமிரண்டு மாத்திரையேழே*

I I I S I I=(7)

50. செயதாளம் (जयताळः ஜயதாளம்)

*செயதாளம்பிறை செங்கோல்கணைசிலை*
*அயில்விழிச்சுழி மின் ஐம்பது ஆகும்*

S I I S 0 0 S̀=(10)

*செயதாளம் கோல்சிலை யொன்றிருசுழி*
*நயமானபுலிதம் மாத்திரையேழே*

I S 0 0 S̀=(7)

---

49. अथवा नगणो जश्च लघुश्चेति प्रकीर्तितः । इति तृतीयमठ्यः—*ஆதிபாதம்*

I I I I S I I=(8)

नगणो जगणो लश्च प्रतिमंठे नियोजितः । इति प्रतिमंठः — *பாதார்ணவம்*

I I I I S I I=(8)

50. जगणो लौ द्रुतौ पश्च जयताळे प्रकीर्तितः—*ஆதிபாதம்*

I S I I I 0 0 S̀=(10)

जगणो लौ द्रुतौ पश्च जयताळे प्रकीर्तितः—

*பாதார்ணவம்*

I S I I I 0 0 S̀=(10)

51. குடுக்கம் (कुडुक्कः குடுக்கம்)

*குடுக்கம் இருசுழிகூர்கணை விழிகோல்*
*அடுக்கவருவதும் ஐம்பத்தொன்றே*

0 0 I I = (3)

*குடுக்கமிரண்டு கொண்டதுரிதம்*
*அடுத்தமிரு கோல்மூன்றே மாத்திரை*

0 0 I I = (3)

52. நிச்சாருகம் (निस्सारुकः நிஸ்ஸாருகம்)

*நிச்சாருகமே நீளம் இருகோல்*
*அச்சாவிரமம் ஐம்பத்திரெண்டே*

I Ì = ($2\frac{1}{4}$)

*நிச்சாருக மிருகோல் மேலவிராம*
*வச்சால் மாத்திரை யிரண்டேகாலே*

I Ì = ($2\frac{1}{4}$)

---

51. **द्रुतद्वयं लघुद्वंद्वं भवेत्तालकुट्टुंबकः**—*ஆதிபரதம்*
**द्रुतद्वंद्वं लघुद्वंद्वं भवेत्ताळे कुडुक्कके**--*பரதார்ணவம்*

52. **लघुद्वंद्वं विरामान्त्यं ताळे निःसारके भवेत्**-- *ஆதிபரதம்*
**लघुद्वंद्वं विरामान्तं ताळे निस्सारकाभिधे**--
*பரதார்ணவம்*

53. கிரீடை (क्रीडाताळः க்ரீடாதாளம்)

கிரீடை இருசுழி கிளரதுதுடிகடை
ஆரிடைவருவது ஐம்பத்துமூன்றே

$$\grave{0}\,0 = (1\tfrac{1}{4})$$

கிரீடதாளம் கோல்விராமம்
புரீடமாத்திரை யொன்றேகாலாமே

$$\grave{\mathrm{I}} = (1\tfrac{1}{4})$$

54. திரிபங்கி (त्रिभङ्गी த்ரிபங்கீ)

திரிபங்கி என்பது சகணம் குருவாய்
அறியப்படுவதும் ஐம்பத்துநாலே

I I S S=(6)

திரிபங்கிதாளம் செவ்விரு வில்லுடன்
மறுகாதசிலை யுடன்மாத்திரையாறே

I S I S=(6)

---

53. द्रुतद्वयं विरामान्तं क्रीडाताळे प्रकीर्तितम् ।
चण्डनिस्सारकः कैश्चिद्यमेवाभिधीयते – ஆதிபரதம்
द्रुतद्वंद्वं विरामान्तं क्रीडाताळे प्रकीर्तितम्—
பரதார்ணவம்

54. सकाराद्गुरुणैकेन त्रिभङ्गिरभिधीयते--ஆதிபரதம்
सकाराद्गुरुणैकेन त्रिभङ्गिरभिधीयते—பரதார்ணவம்

55. கோகிலப்ரியன் (कोकिलप्रियः கோகில்ப்ரியம்)

*கோகிலப்பிரியன் குருவொருகணைமின்*
*ஆகிலும் தாளம் ஐம்பத்தைக்தே*

S I S=(6)

*கோகிலப்பிரியங் குருகோல் பிளுகங்*
*கீர்த்தியாக மாத்திரையாறே*

S I S=(6)

56. ஸ்ரீ கீர்த்தி தாளம் (श्रीकीर्तिताळः ஸ்ரீ கீர்த்திதாளம்)

*ஸ்ரீ கீர்த்தி யென்பது சிலைகணை விழியென்*
*றறியப்படுவது மைம்பத்தாறே.*

S S I I=(6)

*ஸ்ரீ கீர்த்திதாளம் சிலையிரண்டிருகோல்*
*மறுகீர்த்தியாக மாத்திரையாறே*

S S I I=(6)

---

55. कोकिलप्रियताळे स्यात् क्रमाद्गुरुलघुप्लुताः—*ஆதிபரதம்*
कोकिलप्रियताळे स्यात् क्रमाद्गुरुलघुप्लुताः—
*பரதார்ணவம்*

56. श्रीकीर्तिसंज्ञिके ताळे गुरुद्वंद्वं लघुद्वयं—*ஆதிபரதம்*
श्रीकीर्तिसंज्ञके ताळे गुरुद्वंद्वं लघुद्वयम्—*பரதார்ணவம்*

57. விந்துமாலி (बिन्दुमाली பிந்துமாலி)

விந்து மாலியின் குரு மறை சுழி
யந்தங்குருவர மம்பத்தேழே

S 0 0 0 0 S=(6)

விந்து மாலி வில் கடை தலை
யாக நாற் சுழி மாத்திரை யாறே

S 0 0 0 0 S=(6)

58. சமதாளம் (समताळ: ஸமதாளம்)

சமதாளங்கணை தரு கோவிரு சுழி
யமைய விராம மம்பத்தெட்டே

I I 0 8=$(3\frac{1}{4})$

சமதாளங் கோலிரு விழியிரண்டுகோல் சுழிமேல் விராமம்
அமைதாளமும் நாலே முக்கால் மாத்திரை

I I 0 0 I 8=$(4\frac{3}{4})$

---

57. चत्वारो बिन्दवो गुर्वोर्मध्ये स्याद्बिन्दुमालिनि—

ஆதிபரதம்

चत्वारो बिन्दवो गुर्वोर्मध्ये स्याद्बिन्दुमालिनि—

பரதார்ணவம்

58. समताळे लघुद्वंद्वं विरामान्तं द्रुतद्वयम्—ஆதிபரதம்

## 59. நந்தனம் (नन्दनः நந்தனம்)

நந்தன மிருகணை நயனச் சுழியுட
னந்தம் உயிர் பெறிலம்பதில் நவமே

I I 0 0 S = (6)

நந்தன மிருகோல் நயனமிரு பாம்பும்
வந்தன மீதில் மாத்திரை யாறே

I I 0 0 S = (6)

## 60. உதிக்ஷணம் (उद्वीक्षणः = உத்வீக்ஷணம்)

உதிக்ஷணங்குரு வுடனிருகணை யறியில்
வகுத்தன தாள மறுபதென் றுரையே

I I S = (4)

உதிக்ஷண மாத்திரை யிருகணை யொருசிலை
மதிக்கனுக நாலே மாத்திரை

I I S = (4)

---

59. लौ द्रुतौ च प्लुतश्चान्ते ताळे स्यान्नन्दनाभिधे—
केचित्तु वक्रयोर्मध्ये बिन्दुयुग्मं प्रचक्षते। ஆதிபாதம்

I I 0 0 S அல்லது S 0 0 S

लौ द्रुतौ च प्लुतश्चान्ते ताळे स्यान्नन्दनाभिधे—

பாதார்ணவம்

60. उद्वीक्षणे लघुद्वंद्वं गुरुरेकस्ततः परम् —ஆதிபாதம்

उद्वीक्षणे लघुद्वंद्वं गुरुरेकस्ततः परम् -- பாதார்ணவம்

61. மட்டியம் (मठ्यः = மட்டியம்)

மட்டிகை குருவும் வரு சுழிபுலித
மட்டதிசை யென்றறுபத் தொன்றே

S 0 S̀ = (5½)

அந்தி மட்டிகை யனுக்கிரு சுழியின்
வந்தன விருகோல் மாத்திரை மூன்றேகால்

0 δ I I = (3¼)

62. இடங்கி (ढेङ्कि = டேங்கி)

இடங்கி யென் பதிருகுரு விடைகணை
யொடங்கு தாளமறு பத்திரண்டே

S I S = (5)

இடங்கி தாளம் பிறையது கணைகுரு
அடங்கலாகு மாத்திரை யைந்தே

S I S = (5)

---

61. मट्ठिकाया विधातव्या गुरुबिन्दुप्लुताः क्रमात् ।
विरामाद्दिकयुग्मान्तं लद्वयं चेति केचन — ஆதிபாதம்

S 0 S̀ அல்லது I I 0 δ

मट्ठिकाया विधातव्या गुरुबिन्दुप्लुताः क्रमात् —
आदिमठ्यकताळे तु लद्वयं द्वौ विरामकौ — பரதார்ணவம்

S 0 S̀ அல்லது I I 0 δ

62. ढेङ्किका ताळके गुर्वोरन्तराले लघुः स्मृतः । ஆதிபாதம்
ढेङ्किकाभिधताळे तु रगणः परिकीर्तितः — பரதார்ணவம்

63. வண்ணமட்டிகை (वर्णमठ्यक: வர்ணமட்யகா)

*வண்ண மட்டிகை கோல் மாவிழி சுழியோ*
*டன்ன கோலிரு சுழி யறுபத்து மூன்றே*

I I 0 0 I 0 0=(5)

*வண்ண மட்டிகை யிருவாளி கண்வாளி*
*கண்ணினை மட்டளவு மேனி மாத்திரையைந்தே*

I I 0 0 I 0 0=(5)

64. அபிநந்தனம் (अभिनन्दन: அபிநந்தனம்)

*அபிநந்தனமே யக்கணை சுழிகோல்*
*பின்சுழி குருவி லறுபத்துநாலே*

I 0 I 0 S=(5)

*அபிநந்த மிருசரமிரு வட்டங்கோல்*
*நபிவந்த மாத்திரை நாலே*

I I 0 0 I=(4)

---

63. लौ बिन्दू लश्च बिन्दू च वर्णाख्यमठिका मता—*ஆதிபரதம்*
लौ बिन्दू लश्च बिन्दू च वर्णमठ्याख्यताळके—
*பரதார்ணவம்*

64· लघुद्वयं बिन्दुयुगं गुरुश्चैवाभिनन्दने—*ஆதிபரதம்*

I I 0 0 S=(5)

लद्वयं दद्वयं चैव गुरुश्चैवाभिनन्दने—*பரதார்ணவம்*

I I 0 0 S=(5)

65. அந்தகக்கிரிடை (अन्तरक्रीडा அந்தரக்கிரீடா)

அந்தகக்கிரீடை யறுபத்தஞ்செனக்
கந்தச் சுழிதமிழ் கடையில் விராமம்

0 0 ઠ=(1¾)

அந்தகக் கிரீடை முச்சுழி யனுக்கு
மூந்து தொகைக்கு ஒன்றே முக்கால் மாத்திரை

0 0 ઠ=(1¾)

66. மல்லதாளம் (मल्लताळः மல்லதாளம்)

மல்லதாள மறைகணை விழியே
யுள்ள விராம மறுபத்தாறே

I I I I 0 ઠ=(5¼)

மல்லதாளம் நேரொரு நாலுவிழியது
இரண்டனுக் குடன் மாத்திரை யைந்தேகால்

I I I I 0 ઠ=(5¼)

---

65. विधातव्यान्तरक्रीडा विरामान्तं द्रुतद्वयम् —ஆதிபரதம்
विधातव्यं नवक्रीडे विरामान्तद्रुतद्वयम् —பரதார்ணவம்

66. मल्लताळेऽब्धिलः खण्डो विरामान्तं द्रुतद्वयम् —
ஆதிபரதம்

मल्लताळे विधिलघवः परं विरामान्तद्रुतद्वयम् —
பரதார்ணவம்

67. தீபகம் (दीपकः தீபகம்)

*தீபகஞ்சுழி விழிகோல் பதங்குரு வென*
*வாபகமென்ப தறுபத்தேழே*

0 0 I I S S=(7)

*தீபகதாளம் இரு சுழிசே விணையிருசிலேநே*
*ராபகமான மாத்திரை யேழே*

0 0 I I S S=(7)

68. அனங்கதாளம் (अनङ्गतालः அநங்கதாளம்)

*அனங்கதாள மறுபத்தெட் டெனக்*
*கனங் கோலுயிரிரு கணை குருமின்னே*

I S̀ I I S S̀= (11)

*அனங்கதாளமம் புயிரிருகோல்*
*இனங்கள் குருநாகமீசன் மாத்திரை பதினொன்றே*

I S̀ I I S S̀=(11)

---

67. द्रुतद्वंद्वं लघुद्वंद्वं गुरुद्वंद्वं च दीपके—*ஆதியரதம்*
द्रुतद्वंद्वं लघुद्वंद्वं गुरुद्वंद्वं च दीपके—*பரதார்ணவம்*

68. लघुप्लुतौ सकारश्च स्यादनङ्गाभिधे प्लुतः—*ஆதிபரதம்*
लघुः प्लुतः सकारश्चानङ्गताळे ततः प्लुतः— *பரதார்ணவம்*

69. விடமதாளம் (विषमताल: விஷமதாளம்)

விடமதாளஞ் சுழிவேத மிருமறை
யடமதில் கடை துடி யறுபதில் நவமே

0 0 0 0 0 0 0 0 ʊ = ($4\frac{1}{4}$)

விடமதாளம் விழியெட் டென விளம்பின
விராமம் மாத்திரை நாலேகாலே

0 0 0 0 0 0 0 0 ʊ = ($4\frac{1}{4}$)

70. நாந்தித்ாளம் (नान्दिताल: நாந்திதாளம்)

நாந்தினம்பு நயனஞ்சுழி விழிகுருவென்
றறிந்த வாரறியி லயம்பிலெழுப தென்றுரையே

I I 0 0 S S = (7)

நாந்திதாள மிருகோல் நயனமிரு குருவுடன்
இரண்டு நயமாக நவின்றன மாத்திரை யேழே.

I I 0 0 S S = (7)

---

69. वेदद्रुतविरामान्त द्वौ ताळे विषमे तथा— ஆதிபரதம்
वेदद्रुताविरामान्ता पुनस्ते विषमे मता:—பரதார்ணவம்

70. नान्दिताळे समुद्दिष्टा लघुर्बिन्दू लघूगुरू— ஆதிபரதம்

I 0 0 I I S S = (8)

नान्दिताळे समुद्दिष्टा लो बिन्दू लौ गुरू ततः—
பரதார்ணவம்

I 0 0 I I S S = (8)

